# திருத்தல்வாதிகளின் "முகமூடி" கிழிகிறது !

# ஒன்றுபட்ட நடவடிக்கை பற்றிப் பேசுவது

## உண்மைதானா? அல்லது இதுவும் ஒரு "ஸ்டண்டா"?




கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்) வாரஏடு

கதிர் 4 ] 14-5-67 20 காசுகள் மலர் 34


கல்கத்தாவில் திருத்தல்வாதிகளின் தேசியக் கவுன்சில் அண்மையில் நடந்தது. கவுன்சில் முடிந்ததும் திருத்தல்வாதக் கட்சியின் அரசியல் விவேகத்தைத் தொகுத்துகூறுவதாக நினைத்துக்கொண்டு தேர்தலுக்குப் பின்னால் உள்ள நிலைமைகள் குறித்து ஒன்பது பக்கங்களடங்கிய ஒரு அறிக்கையை அவர்கள் வெளியிட்டுள்ளனர். தாங்கள் பூண்டிருந்த மார்க்சிய வேடத்தை கலைத்தெறிந்து விட்டு மந்திரி சபையில் எபபடியேனும் இடம் பெறுவது ஒன்றே தங்களின் நோக்கமென்பதை பச்சையாகக்காட்டியுள்ளனர். இந்த நாட்டிலுள்ள வர்க்க சக்திகளின் சமநிலையில் மாற்றங் காண்பதல்ல அவர்களின் நோக்கம் என்பது, தெளிவு.

### ஆழமாகிவரும் நெருக்கடி !

ஒரு ஆழமான நெருக்கடியின் நடுவிலே இன்று இந்தியா இருக்கிறது. இந்த நெருக்கடி இருப்பதை ஒப்புக்கொள்ள ஆளும் வர்க்கங்கள் நிர்ப்பந்திக்கப்பட்டுள்ளனர். தொழிலாளி வர்க்கம் பெரும் தாக்குதலுக்கு உட்பட்டு உள்ளது. விவசாயிகள் துன்பத்திற்காளாகியுள்ளனர். இந்த நெருக்கடி உடனடியான எதிர்காலத்திற்காக பல்வேறு கட்சிகளை வார்த்தெடுக்கவும், மறு வார்ப்புக்கு ஆட்படுத்தவும் செய்கிறது. தேர்தலுக்குப் பின்னால் உள்ள நிலைமை குறித்து ஒரு சரியான சித்திரத்தைக் காண விரும்பும் எவரும் இந்த மையமான உண்மையின் அடிப்படையில் தான் ஆராய்ச்சி செய்வார்கள்.

### ஆலோசனைகள் எதுவுமில்லை

ஆனால், மார்க்சிய வழிமுறையை கையாண்டால் திருத்தல்வாதிகளாக இருக்க முடியாதல்லவா? ஆழப்பட்டு வரும் பொருளாதார நெருக்கடி பற்றி மேலெழுந்தவாரியாக ஓரிரண்டு வார்த்தைகளோடு நிறுத்திக் கொண்டார்கள். இவர்கள் இதுபற்றிக்கேள்விப்பட்டுள்ளார்களா என்பதே சந்தேகத்திற்குரியதாக இருக்கிறது. திருத்தல்வாதக் கட்சியின் அறிக்கையில் இதுபற்றிய ஆலோசனைகள் எதுவுமில்லை.

### இரண்டு முரண்பட்ட கண்ணோட்டங்கள் !

கல்கத்தாவில்கூடிய நமது கட்சியின் மத்தியக் கமிட்டிக் கூட்டம் இந்த நெருக்கடியை எவ்வாறு கணிக்கிறது? "இதன் மூலாதார வளர்ச்சிக்கும், பரிணாமமாற்றத்திற்கும் மேலும் ஆழமான அடிப்படையான காரணமாக இருப்பது உற்பத்தி சக்திகளுக்கும், காலாவதியான உற்பத்தி உறவுகளுக்கும் இடையேயான மிகவும் தாமதப்படுத்தப்பட்ட முற்றாகப் பக்குவப்பட்ட முரண்பாடே ஆகும். இதை வேறு வார்த்தைகளில் சொல்லவேண்டுமென்றால் பெருமுதலாளிகளாலும் அவர்களது கூட்டாளிகளாலும் ஜனநாயகப் புரட்சி தாமதிக்கப்பட்டது, சீர்குலைக்கப்பட்டது, நசுக்கப்பட்டது, என்ற உண்மை நம் கண் முன்னால் ஆத்திரத்துடன் வெடித்துத் தென்படுகிறது. இது முதலாளித்துவப்பாதை காரணமாக எழுந்த நெருக்கடியாகும்.

இந்த முதலாளித்துவப் பாதையானது சரித்திர ரீதியாக காலாவதியாகிப் போன சமுதாய வளர்ச்சி பற்றிய எல்லா யதார்த்த நியதிகளுடனும் மோதிக் கொண்டு நிற்கும் ஒரு பாதையாகும். இந்த நெருக்கடியை அரசாங்கத்தின் தலைமையாலோ பூர்ஷ்வா நிலப்பிரபுத்துவ கட்டுக்கோப்புக்குள்ளோ தீர்ப்பது என்பது சாத்தியமற்றதாகும். இரண்டு கண்ணோட்டங்களுக்கும் இடையேயான வித்தியாசம் தெளிவானது, பெயரளவில் நெருக்கடியை சொல்லிக்கொண்டு பாராளுமன்ற போராட்டத்தில் மட்டும் இறங்கியுள்ளது. இது ஒரு கண்ணோட்டம்.

இன்னொரு கண்ணோட்டம், மிகக் குறைந்த காலத்திலேயே நெருக்கடியின் அழுத்தத்தினால் மக்களின் இயக்கம் நிர்ப்பந்திக்கப் பட்டுள்ளதைக் காண்கிறது. அரசியல் மாற்றங்களையும் அமைச்சரவைகளையும் இந்த நெருக்கடியின் விளைவுகளாகக் காண்கிறது. பாராளுமன்றச் சுற்று வட்டத்திலும் கூட சக்திகளின் சமநிலையை மாற்றுவதற்கு மக்களின் இயக்கங்களைவளர்த்தெடுப்பதின் மூலமே முடியுமென்பதை உணரும் கண்ணோட்டமாகும் அது. இடைக் காலத்திற்கு அதாவது தற்போதுள்ள காலத்திற்கும் ஒரு தேசிய ஜனநாயக அரசினை அமைக்கும் காலத்திற்கும் இடைப்பட்ட காலத்திற்கு மத்தியில் காங்கிரசல்லாத ஒரு ஜனநாயகக் கூட்டரசு என்ற கோஷத்தை தங்களின் மையமான கோஷமாக திருத்தல்வாதக் கட்சி முன் வைத்துள்ளது.

### திருத்தல்வாதிகளின் குறைந்த பட்சத்திட்டம் !

இத்தகைய ஆட்சிக்கான திருத்தல்வாதிகளின் குறைந்த பட்சத் திட்டத்தில் பிரமாண்டமான பாதுகாப்புச் செலவைக் குறைப்பதென்பதோ, அல்லது பாகிஸ்தான் சீனா போன்ற அண்டை நாடுகளுடன் உள்ள பிரச்சினையை சமாதானமாகத் தீர்த்துக் கொள்வதென்பதோ இடம் பெறவில்லை. இத்தகைய முக்கியமான கோரிக்கைகளை ஒப்புக் கொண்டால் திருத்தல்வாதிகள் எங்ஙனம் திருத்தல்வாதிகளாக இருக்க முடியும். தன்னிறைவு பற்றிப் பேசுவது ஆனால் நிபந்தனையுடன் கூடிய உதவி பற்றி பேசாமல் விடுப்பது, அந்நிய மூலதனத்தை தேசிய மயமாக்குவது பற்றிப் பேசுவது, ஆனால் மக்களை வறுமையில் வதைக்கும் பாதுகாப்புச்செலவைக்குறைப்பதுபற்றி பேசாமல் விடுப்பது இந்திய சீன பிரச்சினைகளை சமாதான பூர்வமாகத் தீர்க்க வற்புறுத்தாமலிருப்பது இவைகளுக்கு காரணம் என்ன தெரியுமா? திருத்தல்வாதிகள் 'நல்ல' பூர்ஷ்வா தேசியவாதிகளாக விளங்க விரும்புகின்றனர். அவ்வளவுதான்!

### அருகதை உண்டா ?

பாதுகாப்பிற்கு ஆகும் அதிகமான செலவைக் குறைக்காது மக்களின் துயரத்தை துடைக்க முடியும் என்று யாராவது சொல்ல முடியுமா. ராணுவத்திற்கு ஆகும் இந்த அபரிமிதமான செலவைக் குறைக்காமல் அமெரிக்க ஊடுருவலைத் தடுக்க முடியும் என்று யார்தான் சொல்வார்கள். சீனாவைக் கட்டுப்படுத்த வேண்டும் என்று கொள்கையை அனுசரிக்கும் அரசாங்கத்திற்கு ஆதரவளிக்கும் எந்தக் கட்சிக்காவது தன்னை மார்க்சிஸ்ட் கட்சி என்று அழைத்துக் கொள்ள அருகதை உண்டா?

### திருத்தல்வாதக் கட்சிக்கு ஜெயப் பிரகாசரின் சர்டிபிகேட் !

ஆம்! எத்தகைய ஒரு அரசை திருத்தல்வாதிகள் தோற்றுவிக்க விரும்புகிறார்கள் என்பதற்கு அவர்களின் குறைந்த பட்சத் திட்டமே ஓர் எடுத்துக்காட்டு. வெறும் சந்தர்ப்பவாதத்தை அடிப்படையாகக் கொண்ட பாராளுமன்றக் குறுக்கு வழிகள் இங்கேதான் அழைத்துச் செல்லும். தேசியத் தன்மை கொண்ட நல்ல கட்சி என்று திருத்தல்வாதக் கட்சிக்கு ஜெயப்பிரகாஷ் நாராயணன் 'சர்டிபிகேட்' வழங்கியது ஏதோ தற்செயலானதல்ல.

தற்போதைய காலத்திற்கான அவர்களின் பிரதான கோஷத்தை ஆராய்வோம். வர்க்கக் கண்ணோட்டம் முழுமையாகஇல்லாதது, பல்வேறு அரசியல் கட்சிகளை வர்க்க ரீதியில் ஆராயாதது ஆகியவையே அவர்களின் சந்தர்ப்பவாதத்திற்கு மூல வேர்களாகும். இதற்காக பாராளுமன்றத்திலுள்ள எல்லா இடதுசாரி எதிர்க் கட்சிகளும் ஒன்றுபட்டு காங்கிரசுக்கு மாற்றாக விளங்கக்கூடாது என்று பொருளல்ல! அல்லது மக்கள் முன்னால் தங்களை காங்கிரசுக்கு மாற்றாகக் காட்டிக்கொள்ள சுதந்திரா ஜனசங்கம் போன்ற கட்சிகள் செய்யும் முயற்சிகளை உடைத்தெறியக் கூடாதென்று பொருள் கொள்ளக் கூடாது.

### திருத்தல்வாதிகளின் கூட்டரசும் சுதந்திரா ஜனசங்கமும் !

ஆனால் திருத்தல்வாதிகள் மத்தியில் அமைக்க விரும்பும் ஜனநாயகக் கூட்டரசில் இந்தக் கட்சிகள் இடம்பெற மாட்டாது என்று யாராலும் உறுதிகூற முடியாது. அவர்கள் இந்தக் கட்சிகளைப் பிற்போக்குக் கட்சிகள் என்று அழைக்கும் அதே நேரத்தில் இந்தக் கட்சிகள் ஆதிக்க நிலையிலோ போர்த் தந்திர முக்கியத்துவமுள்ள நிலையிலோ, அல்லது பிற பிற்போக்கு கட்சிகளுடன் சேர்ந்து தவிர்க்கமுடியாத சக்தியாகவோ இருக்கிற அமைச்சரவைகளில் அப்பட்ட சந்தர்ப்பவாதமாகப் பங்கு கொண்டுள்ளனர். ராஜஸ்தானத்தில் சுதந்திராக் கட்சிக்

(8ம் பக்கம் பார்க்க)

## தொழிற்சங்கத் தலைவர் டி. எஸ். ராமானுஜம் மறைவுக்கு அஞ்சலி !

10—5—67 புதன் நள்ளிரவு 1-30 மணிக்கு பிரபல தொழிற்சங்கத் தலைவரான டி. எஸ். ராமானுஜம் திடீரென மாரடைப்பால் மாண்ட செய்திகேட்டு பேரதிர்ச்சி அடைந்தோம்.

ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்தில் முன்னணியில் நின்ற விடுதலை வீரர் அவர்.

தமிழகத்தில் தொழிற்சங்க இயக்கத்தைக் கட்டி வளர்த்த ஆரம்பகாலத் தொழிற்சங்கத் தலைவர்களில் ஒருவர் அவர். தொழிற்சங்க இயக்கத்திற்கு அளப்பரும் தொண்டாற்றியவர் அவர்.

அன்னவரின் மறைவு தொழிற்சங்க இயக்கத்திற்கு ஒரு பேரிழப்பாகும்.

அவரது பிரிவால் துயருற்றிருக்கும் குடும்பத்தினருக்கு எமது ஆழ்ந்த வருத்தங்கள்.

மறைந்த தொழிற்சங்கத் தலைவர் டி. எஸ். ராமானுஜம் அவர்களுக்கு செங்கொடி தாழ்த்தி எங்களது அஞ்சலியைத் தெருவித்துக் கொள்கிறோம்.

# தீக்கதிர்

## ஜனாதிபதி தேர்தல்!

மூன்றுவது இந்திய ஜனாதிபதியாக ஜாகிர் ஹுசேன் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். நாட்டின் ஐக்கியத்தின் சின்னமாகவும் கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்டவராகவும் ஜனாதிபதி கருதப்படுகிறார். ஆகவே போட்டியின்றியே ஜனாதிபதி தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தால் பொதுவாழ்வின் தரம் உயர்ந்திருக்கும்.

ஆனால் காங்கிரஸ் கட்சியானது குறுகிய கட்சி நலன் கண்ணோடு பார்த்ததால் இந்தப் போட்டி தவிர்க்க முடியாததாயிற்று. எதிர்க்கட்சிகள் ஜனாதிபதியாக யாரை நிறுத்துவது என்று ஏகமனதான முடிவுக்கு வந்தால் எதிர்க்கட்சிகளின் யோசனையைப் பரிசீலிப்பதாக பிரதம மந்திரி இந்திராகாந்தி பகிரங்கமாக அறிவித்திருந்தார். ஆனால் சுப்பாராவ் பெயரை எதிர்கட்சிகள் ஏகமனதாகப் பிரேபித்ததும் இந்திரா காந்தி தம் வாக்கைக் காப்பாற்றவில்லை. நாட்டைவிட கட்சி நலனே பெரிதாகக் கருதப்பட்டது. அதனுல்தான் ஜனதிபதி, உபஜனதிபதி நாடாளுமன்ற சபாநாயகர் எந்தப் பதவியையும் எதிர்க்கட்சிகளுக்கு விட்டுக் கொடுக்கக் காங்கிரஸ் சம்மதிக்கவில்லை. இந்த நிலைமையில் நாட்டின் பெரும்பான்மையான மக்களின் ஓட்டைப் பெறாத காங்கிரஸ் கட்சியின் சார்பில் நிறுத்தப்பட்ட ஜாகிர் ஹுசேனை எதிர்த்துப் போட்டியிடுவது எதிர்க்கட்சிகளின் கடமையாகி விட்டது.

இந்தத் தேர்தல் முடிவுகள் காட்டுவதென்ன? எதிர்க்கட்சிகளின் வேட்பாளரைவிட ஜாகிர் ஹுசேனுக்கு 1 லட்சத்து 727 ஓட்டுகள் அதிகம் கிடைத்துள்ளதாக அறிவிக்கப்பட்டுள்ளது, இதைப் பற்றி காங்கிரஸ் பெருமைப்பட்டுக் கொள்ளலாம். ஆனால் தமிழகம், ஹரியனு, ஒரிஸ்ஸா கேரளம், பீகார் ஆகிய மாநிலங்கள் ஜாகிர் ஹுசேனை நிராகரித்துள்ளன. ஜாகிர் ஹுசேனுக்கு 1 லட்சம் ஓட்டுக்களை அதிகப்படுத்திக் காட்டியிருப்பது ராஜ்யசபை மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சபையல்ல இது. இந்தச்சபைஇன்றையநிலைமையில் மக்களின் கருத்துக்களைப் பிரதிபலிப்பதாகச் சொல்ல முடியாது. இந்தச் சபையில் காங்கிரசுக்கு 100 வோட்டுக்கள் மெஜாரிடி இருக்கிறது. ஆனால் லோக சபையில் 45 வோட்டுக்கள் தான் மெஜாரிடி இருக்கிறது' இந்த ராஜ்ய சபை ஓட்டுக்கள் (ஒரு ஓட்டின் மதிப்பு 576) மட்டும் இல்லாதிருந்தால் ஜாகிர்ஹுசேனுக்கு 30 ஆயிரம் ஓட்டுகள்தான் அதிகம் கிடைத்திருக்கும்.

காங்கிரஸ் அமைச்சரவையுள்ள ஆந்திரத்தில் 15 காங்கிரஸ் உறுப்பினர்களும் மத்திய பிரதேசத்தில் 7 காங்கிரஸ் உறுப்பினர்களும் ஜாகிர் ஹுசேனுக்கு ஓட்டுப் போடவில்லை என்ற விவரம் எதிர்காலத்தைப் பற்றி காங்கிரசுக்கு எச்சரிக்கையாக அமைந்துள்ளது. நாடாளுமன்றத்தில் எதிர்கட்சிகள் அனைத்தும் முற்போக்கு இடதுசாரி ஜனநாயகக் கட்சிகள் என்றும் கூற முடியாது. அப்படியிருந்தும் நாடாளுமன்ற உறுப்பினர்களில் எதிர்க்கட்சிகள் வரிசையிலிருந்து 4 பேரை மட்டுமே காங்கிரஸ் ஈர்க்க முடிந்துள்ளது.

பொதுவான காங்கிரஸ் உறுப்பினர்கள் காங்கிரஸ் வேட்பாளர்களுக்கே ஓட்டுப் போட்டிருக்கிறார்கள் என்பது உண்மையே. காங்கிரஸ் கட்சிக்கு விரோதமாக சில பல பேர் ஓட்டுப் போடுவார்கள் என்று எதிர்பார்க்கப்பட்டது. அவ்வாறு நேர்வதைக் கொண்டு காங்கிரஸ் கட்சி எதிர்காலத்திலும் கட்டுப்பாடுடன் திகழும் என்று கருத முடியாது. ராஜஸ்தான் போன்ற மாநிலங்களில் உறுப்பினர்கள் கட்சி மாறியது கைமேல் பலன் கிட்டும், பதவிக்கு வர முடியும் என்ற நோக்கத்தால்தான். காங்கிரஸ் சொந்த நலன்களைப் பேணும் கோஷ்டிகள் நிறைந்த கட்சியாதலால் அது எந்த நிமிடத்திலும் வெடிக்கலாம். அதன் கடந்த கால வரலாறு கூறும் உண்மை இது.

ஆனால், இன்றைய அரசு மக்களைச் சுரண்டுவதற்கு முதலாளி வர்க்கத்தின் கையிலுள்ள கருவி என்பதையும் இதில் அடிப்படை மாறுதல் ஏற்பட முடியாத நிலையில் வெகுஜன ஸ்தாபனங்களின் பலத்தைக் கொண்டே மக்கள் நலனைப் பாதுகாக்க முடியும் என்பதையும் மறந்துவிடக் கூடாது.

இன்று நாட்டின் நெருக்கடி சாதாரண நெருக்கடியல்ல. இது ஒரு நீண்ட நெருக்கடி. இதைக் கடந்துவிடுவதும் எளிதல்ல. ஆகவே பெருமுதலாளி வர்க்க—நிலப்பிரபுத்துவ அரசாங்கம் மக்கள் மீது சுமையை ஏற்றப் பார்க்கிறது.

இதை மக்கள் சகித்துக்கொண்டு போகும் நிலைமை இன்றில்லை. மக்கள் எதிர்ப்பு நாடாளுமன்றத்திலும் பிரதிபலிக்கும். ஆனால் நாடாளுமன்ற நடவடிக்கைகள் மட்டும் போதாது. அத்துடன் வெளியிலும் வெகுஜன இயக்கங்கள் வலுவடைய வேண்டும். அப்போதுதான் அரசாங்கம் வழிக்குவருமேயொழிய மனுப் போடுவதால் அல்ல. இதை ஜனதிபதி தேர்தலும் உணர்த்துகிறது, அற்ப மெஜாரிடி இருந்தாலும் காங்கிரஸ் கட்சி எதிர்க் கட்சிகளுக்கு விட்டுக் கொடுக்காமல் எதேச்சாதிகாரப் போக்கில் செல்லவே முனைகிறது.

# தொழிலாளர் அமைச்சரும் தொழிற் சங்கப் பிரதிநிதிகளும்!

7-5-1967 ஞாயிற்றுக்கிழமையன்று சென்னையில் அமைச்சர் மாதவன் அவர்கள் தொழிற்சங்கப் பிரதிநிதிகளை அழைத்து ஒரு மாநாடு கூட்டினர். அது காலை 10 மணி முதல் மதியம் 1 மணி வரை நடந்தது. ஐ.என்.டி.யு.சி நீங்கலாக மற்ற எல்லாத் தரப்பு தொழிற்சங்கப் பிரதிநிதிகளும் வந்திருந்தனர்.

அமைச்சர் துவக்க உரையில் புதிய ஆட்சி தொழிலாளர் நலனைப் பேணிப்பாதுகாக்கும் என்றும், ஏற்கனவே இருந்த நிலை இருக்காது என்றும், தொழிலாளர் தரப்பினருக்கும் ஆட்சியில் உள்ளவர்களுக்கும் தொழிலாளர் நலன் குறித்து ஒரே கருத்துத்தான் என்றும் தெளிவுபடுத்தினர். அவரது பேச்சு சகல தரப்பினராலும் வரவேற்கப்பட்டது. இந்த இலாகாவில் இனி ஒரு புதிய கண்ணோட்டம் நிலவும் என்ற நம்பிக்கை பிறந்தது. மீண்டும் இடையில் ஒரு சமயம் அமைச்சர் பேசுகையில் புதிய ஆட்சி இயந்திர மூலையை திணிப்பதை எதிர்ப்பது என்ற கொள்கை ரீதியான முடிவை எடுத்துள்ளதாக அறிவித்து அனைவருக்கும் மகிழ்ச்சியை ஏற்படுத்தினர்.

கருத்துக்களை வழங்கியவர்களில் ஏ. பாலசுப்பிரமணியம் எம்.எல்.ஏ. வழக்கறிஞர் வி. வெங்கட்ராமன் கே. டி. கே. தங்கமணி, எ.எஸ்.கே. அய்யங்கார், கே.எஸ். ஜானகிராமன் ஆகியோர் அகில இந்திய தொழிற்சங்கக் காங்கிரசை சேர்ந்தவர்கள். திரு. ராகவானந்தம் தி.மு.க. தொடர்புள்ள தொழிற்சங்கங்களின் சார்பில் பேசினர்கள். தவிர எஸ்.சி.சி. அந்தோணிப்பிள்ளை எஸ். குருமூர்த்தி, டி.எஸ். ராமாநுஜம் முதலியோரும், எச். எம். எஸ். ஐச் சேர்ந்த வேலுசாமி எம்.எல்.ஏ. சுரேந்திரன் எம்.எல்.ஏ. அவர்களும் பேசினர். எல்.ஐ.சி. ஊழியர்கள் சார்பில் ராஜாராம் என்பவர் பேசினர். வழக்கறிஞர் மோகன் குமாரமங்கலம் அவர்களும் பேசினர்.

தொழிலாளர்கள் முன்னுள்ள பல்வேறு பிரச்னைகள் பற்றி பேசப்பட்டன. அமைச்சர் குறிப்பான சில விஷயங்கள் பற்றி கருத்துக்களைக்கேட்டார். அவை—

1. நமது ராஜ்யத்தில் எழும் தகராறுகளைதுரிதமாகத் தீர்ப்பதற்கான யோசனைகளும், இதற்கான அமைப்பு பற்றியும்

2. டெல்லியில் கூடவிருக்கும் தொழிலாளர்—அமைச்சர்கள் மாநாட்டில் நமது மாநில அரசு எடுக்க வேண்டிய நிலைகள் பற்றியும்.

தோழர் ஏ. பாலசுப்பிரமணியம் எம்.எல்.ஏ. அவர்கள் பேசுகையில் கீழ்கண்ட ஆலோசனைகளை சமர்ப்பித்தார்.

1. அமைச்சர் வெளியிட்ட கண்ணோட்டம் இலாகா முழுவதற்கும் ஏற்படுத்தப்பட வேண்டும். இந்த இலாகா தொழிலாளர் நலனைக்காக்கும் இலாகா என்ற உணர்வு மேலிருந்து கீழ்வரை உத்தியோகஸ்தர்களுக்கு (லேபர் ஆபீசர், துணை பேக்டரி இன்ஸ்பெக்டர்) ஊட்டப்படவேண்டும். எந்த தகராறிலும் உடனடியாக தலையிட்டுசமரசமுயற்சிகளை 1மாதத்துக்குள்முடித்துரிப்போர்ட்டை சர்க்காருக்கு அனுப்பிவிட வேண்டும். சமரசம் செய்ய இடமில்லை, சமரச முயற்சி தோற்றுவிட்டது என்ற ரிப்போர்ட் வந்து விட்டால் உடனே கோர்ட்டுக்கு வழக்கு அனுப்பப்பட்டு விடவேண்டும் இம்முறை அமுலுக்கு வந்து விட்டால் பாதிக்கு மேற்பட்ட தாவாக்கள் துரித பைசலை அடையும்.

2. தொழிற்சங்க அனுபவம் கொண்டவர்களைக் கொண்ட ஒரு சிறு நிரந்தரக்கமிட்டியும் அமைச்சர் அமைக்க வேண்டும் இக்கமிட்டியை அடிக்கடி கூட்டி அமைச்சர் கலந்து கொள்வது அவருக்கு உதவியாக இருக்கும். தொழிலாளர் தரப்பில் எழும்கருத்துக்களை, அவ்வப்பொழுது அமைச்சர் தெரிந்து கொள்ளவும், அதற்கு அந்த முடிவுகளை அவர் எடுக்கவும் அவருக்கு இக்கமிட்டியின் ஆலோசனைகள் உதவும்.

3. டில்லி மாநாட்டில்' அமைச்சர் இங்கு ஆடோமேஷன் குறித்து அறிவித்த நிலையினை தெளிவாக்கி விடவேண்டும்.

4. (Wage–Freeze)—சம்பள முடக்கம் என்ற பேச்சே கூடாது. விலைகளைக் கட்டுப்படுத்துவதற்கு பதில் சமீபத்தில் துணிவிலையையும், உரத்தின் விலையையும் இரும்பு உருக்கின் விலையையும் உயர்த்துவதற்கு வழிகோலியுள்ள மத்திய சர்க்கார் சம்பள முடக்கம் என்று பேசுவதே அதர்மமானது. இதை அனுமதிக்கலாகாது—என்பதை வற்புறுத்திவிட்டு அடுத்து தோழர் வி. வெங்கட்ராமன் அவர்கள் போனஸ் சட்டம் பற்றியும் இதர சில விஷயங்களையும் பேசுவார் என்று கூறி முடித்தார்.

அடுத்துப் பேசிய தோழர் வி. வெங்கட்ராமன் போனஸ் சட்டத்தை எப்படித் திருத்த வேண்டும் என்ற நிலையை அகில இந்திய மட்டத்தில் எல்லாத் தொழிற்சங்க மையங்களும் ஏற்றுள்ள நிலையைவிளக்கினர். மேலும் மாநில அரசு மட்டும் சட்டம் செய்யும் அதிகாரங்களையும் தவிர மத்திய அரசு மாநில அரசு ஆகிய இரண்டு மேசட்டம்செய்வதற்குள்ள அதிகாரங்களையும் (Concurrent List உள்ளவை) எடுத்து விளக்கிதமிழக அரசு இந்த அதிகாரங்களை தொழிலாளர் நலனுக்காக இன்ன இன்ன சட்டங்கள் செய்து அமுலாக்குவோம் என்றஉறுதியான நிலையைடில்லிக்குத் தெரிவித்து விடவேண்டும் என்றார். அவ்வாறு செய்தால் காங்கிரசல்லாதராஜ்யங்களும் தமிழகஅரசைபின்பற்றும் நிலையை ஏற்படுத்தலாம் என்றும்விளக்கினர்கள்.

அமைச்சரின் ஆரம்பப்பேச்சும், இடையிடையே அவர் சொன்ன விஷயங்களும் சொல்லப்பட்ட கருத்துக்களை கவனமாகக்கேட்டுக்கொண்டுபுரிந்து கொள்ள எடுத்துக் கொண்ட முயற்சியும், பாராட்டத்தக்கவை என்பதில் சந்தேகமில்லை இந்த இலாகா துரிதமாக ஒரு புது உணர்வுடன் செயல்பட ஆரம்பிக்கும் என்றே தோன்றுகிறது.

—ந. நிருபர்

## சென்னையில் பீடித் தொழிலாளருக்கு கூலி உயர்வு!

சென்னை பீடித் தொழிலாளர்களுக்கு 10-5-67 முதல் கூலி உயர்கிறது. இன்று பெறுவதைக் காட்டிலும் 32 காசுகள் அதிகம் பெறுவார்கள். 4—5—67 அன்று சென்னை லேபர் ஆபிசர் முன்னிலையில் சென்னை பீடித் தொழிலாளர் சங்கப் பிரதிநிதிகளுக்கும் பீடி முதலாளிகளுக்கும் ஏற்பட்ட ஒப்பந்தப்படி ஆயிரம் பெரிய பீடி சுற்ற ரூ. 2·56ம் ஆயிரம் சிறிய பீடி சுற்ற 2·44ம் தொழிலாளர்களுக்கு கிடைக்கும். இந்தத் தகவலை பீடித் தொழிலாளர் சங்க செயலாளர் கே. வெங்கடேசன் அறிவிக்கிறார்.

## நன்கொடை

துறகுடியில் வீரப்பன்-பாக்கியம் திருமணம் அண்மையில் நடைபெற்றதின் நினைவாக அனுப்பிய ரூ. 2 கிடைத்தது.

## கானூரில்

என். சுப்பையன்-முத்துலட்சுமி திருமணம் அண்மையில் நடைபெற்றதின் நினைவாக அனுப்பியரூ 5 கிடைத்தது.

★

# இலங்கை இந்தியர் பிரச்னை வர்க்கப் பிரச்னையே

## வர்க்க நலனைக் காக்கவே

## வகுப்பு வாதம் கிளப்பப்படுகிறது!

அண்மையில் இலங்கைத் தமிழர்களின் மொழிப் பிரச்சினைதான் மிகவும் சர்ச்சைக்குள்ளான பிரச்சினையாக மாறினாலும் இந்திய வம்சாவளியினர் பிரச்சினையும் அதேபோல் கொந்தளிப்பை உண்டுபண்ணக்கூடிய பிரச்சினையாக உள்ளது. இந்திய வம்சாவளியினர் என்ற பதம் இலங்கையில் ஆயிரத்துக்கு மேற்பட்ட வருடங்களுக்கு முன்பு குடியேறியவர்களிடமிருந்து சுமார் 100 வருடங்களுக்கு முன் குடியேறியவர்களைப் பிரித்துக் காட்டுவதற்கு உபயோகிக்கும் பதமாக இருந்து வருகிறது.

இலங்கையை பிரிட்டிஷார் பிடித்ததும் அதைச் சுரண்டுவதற்குத் தேயிலை, ரப்பர் தோட்டங்களை அமைக்கத் தீர்மானித்தனர். அதற்கு நிலமும் கூலியாட்களும் தேவைப்பட்டது. சட்டங்கள் மூலம் கண்டி குடியானவர்கள் வெளியேற்றப்பட்டனர். இவ்விதம் பலாத்காரமாகப் பிடுங்கிய நிலம் பிரிட்டிஷ் தோட்ட முதலாளிகளுக்கு ஏகருக்கு 5 சதம் என்ற பெயரளவு விலைக்குக் கொடுக்கப்பட்டது.

தோட்டங்களில் கூலிவேலை செய்வதற்கு பிரிட்டிஷ் தோட்ட முதலாளிகள் தென் இந்தியாவில் கண் வைத்தார்கள். தென் இந்தியாவின் இயற்கைப் பொருளாதாரத்தை பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் அழித்ததின் விளைவாக அதன் கடும் உழைப்பாளி மக்கள் வேலைத் தேடி உலகெங்கும் செல்ல நிர்ப்பந்திக்கப்பட்டனர். மலாயாவுக்கும், தென்னாப்பிரிக்காவுக்கும், மத்திய அமெரிக்காவுக்கும் பிஜி தீவுகளுக்கும் அவர்கள் சென்றனர். இந்த மக்களிடத்திலேயே பிரிட்டிஷ் தோட்டச் சொந்தக்காரர்கள் கூலியாட்களை அமர்த்தத் தங்கள் ஏஜெண்டுகளை அனுப்பினர்.

### ஆசைவார்த்தைகள் !

தேயிலைப் புதர்களில் தங்கம் அகப்படுகிறது என்ற கதைகளைக் கட்டிவிட்டு கங்காணிகள் மூலம் தென்னிந்தியாவிலிருந்து தொழிலாளர்கள் தருவிக்கப்பட்டனர். மிகவும் மனிதாபிமான மற்ற முறையில் அவர்கள் இலங்கைக்கு அனுப்பப்பட்டனர். வழியில் நூற்றுக்கணக்கான பேர் மடிந்தனர். இலங்கை வந்ததும் ஆரோக்கியமற்ற, சூழ்நிலையில் மேலும் நூற்றுக்கணக்கான பேர் மடிந்தனர் தொற்றுநோய்களும் பற்றின. இந்நிலைமையில் மருத்துவத் தேவைஅவசரச் சட்டம் பிறப்பிக்கப்பட்டது. இந்தத்தொழிலாளர்களின் நலன்களைப்பார்க்க இந்திய சர்க்காரும் ஒரு ஏஜெண்டை அனுப்பி வைத்தது.

இந்த ஏ, பாடுகளால் தோட்டங்களில் வேலை செய்த இந்தியத் தொழிலாளர்களின் நிலைமை வெளியேயுள்ள தொழிலாளர்களின் நிலைமையைவிட மேலாக இருந்தது. இன்று நிலைமை அப்படியில்லை. இன்று இலங்கையருக்குக் கிடைக்கும் தேசீய சுகாதார சர்வீஸ், கல்வி வசதிகள் தோட்டத் தொழிலாளர்களுக்கு உள்ள அற்ப வசதிகளை மிஞ்சியுள்ளது. என்றாலும் இந்த நூற்றுண்டு துவக்கத்தில் ஏற்பட்ட ஏற்றத்தாழ்வு, இந்திய எதிர்ப்பு உணர்ச்சி வளர்வதற்குக் காரணமாக இருந்தது.

### முக்கிய அம்சம் !

இந்திய வம்சாவளி மக்களில் மிகப் பெரும்பான்மையோர் தொழிலாளர்கள் என்பதும் இந்தப் பிரச்சினையின் முக்கிய அம்சமாகும்.

தோட்டத் தொழிலாளர்களுடன் வந்த மற்ற பிரிவு இந்தியர்கள் இலங்கையர் ரத்தத்தை உறிஞ்சிக் கொழுத்தார்கள் என்பதும் உண்மையே.

ஆனால் இந்திய வம்சாவளித் தொழிலாளர்கள் எந்த வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் என்டதைப் பார்க்கும்போது அவர்கள் சிங்கள தொழிலாளி வர்க்கத்தின் கூட்டாளிகள் என்பதையும் முற்போக்கு இயக்கத்தின் ஒன்றிணைந்த பகுதி என்பதையும் அலட்சியம் செய்ய முடியாது. ஒரு கட்டத்தில் இடதுசாரி இயக்கம் இதைப் புரிந்து மிருந்தது. அதை டி.எஸ். சேனநாயகாவும் (முன்னாள் பிரதமர்) உணர்ந்திருந்தார். ஆகவேதான் அவர்களுக்கு ஓட்டுரிமையைப் பறிக்க அவர் துரித நடவடிக்கை எடுத்தார்.

இந்தப் பிரச்சினையின் இன்னொரு அம்சம் இலங்கை முதலாளி வர்க்கத்தின் சம்மதத்துடனேயே—டி.எஸ். சேனநாயகாவிலிருந்து எஸ். டபுள்யூ ஆர். டி. பண்டார நாயகாவரை சம்மதம் தெரிவித்தே இந்தியத் தொழிலாளர்கள் தருவிக்கப்பட்டார்கள் என்பதாகும். இவர்களைத் தருவிப்பதற்கு ஸ்டேட் கவுன்சில் ஆண்டுதோறும் நிதி ஒதுக்கீடு செய்தது. தொழிலாளர்களை அனுப்ப மறுப்பதாக இந்திய சர்க்கார் மிரட்டிய ஒவ்வொரு சமயத்திலும் இலங்கையில் இருந்து இந்தியாவுக்குத் தூது கோஷ்டி சென்று தொடர்ந்து அனுப்புமாறு வேண்டியது.

இலங்கைக்கு இந்தியத் தொழிலாளர் தருவிக்கப்படுவதைத் தடைசெய்ய வேண்டுமென்று கோரிய ஓரே கட்சி இலங்கை இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சிக்கு முன்னோடியாகத் திகழ்ந்த ஐக்கிய சோஷலிஸ்ட் கட்சியாகும்.

போலி சர்வதேசியத்தின் பெயரால் அப்போது தடை செய்யக்கூடாது என்று கூறிய கட்சிதான் லங்காசம சமாஜி கட்சி என்பதும் இங்கு குறிப்பிடத் தக்கது.

முடிவாக இந்தியாவில் இருந்து குடியேற்றம் தடுக்கப்பட்டது இலங்கை சர்க்காரின் நடவடிக்கையால் அல்ல. 1940ல் தமிழக அரசாங்கமே இப்பிரச்சினையைத் தீர்ப்பதில் தோல்விகண்ட பண்டித நேருவின் ஆலோசனையின் பேரில் இலங்கைக்கு மேலும்குடியேறுவதைத் தடை செய்தது.

இலங்கை தேசியக் காங்கிரசின் முதல் கூட்டத்தில் இலங்கையிலுள்ள இந்தியத் தொழிலாளரின் நிலைமையை அபிவிருத்தி செய்ய வேண்டும் என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டதும் குறிப்பிடத்தக்கதாகும். 1920 டிசம்பரில் நடைபெற்ற இலங்கை தேசியக் காங்கிரசின் விசேஷக் கூட்டத்தில் இந்தியர்களுக்கு ஓட்டுரிமை அளிக்க வேண்டும் என்ற தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது.

1629—31ல் உலகப் பொருளாதார நெருக்கடிக்குப் பிறகு சிங்களவரிடையே வேலையில்லாத் திண்டாட்டம் பெருகிய பிறகே இந்திய எதிர்ப்புக் கிளர்ச்சி தொடங்கியது. எல்லா வகுப்புவாதப் பிரச்சினைகளுக்கும் அடித்தளமாகப் பொருளாதார நெருக்கடியே உள்ளது. ஏ. ஈ. குணசிங்கா போன்றவர்கள் இக்கிளர்ச்சிக்குத் தலைமை தாங்கினார்கள். இந்தியத் தொழிலாளர்களின் (பெரும்பாலும் மலையாளிகள்) ஆதரவுடனேயே தொழிற்சங்கத் தலைவராக குணசிங்கா பிரபலமானார் என்பதும் பின்பு ஏறிய ஏணியையே அவர் எட்டி உதைத்தார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

பின்னர் இலங்கையிலிருந்து இந்தியர்களை வெளியேற்ற வேண்டும் என்ற தீர்மானம் எஸ்டேட் கவுன்சிலில் நிறைவேற்றப்பட்டு நூற்றுக்கணக்கான பேர் இந்தியாவுக்கு அனுப்பப்பட்டனர். ஆனால் யுத்தம் மூண்டதும் இந்திய எதிர்ப்புக் கிளர்ச்சி தணிந்தது. முன்னாள் பிரதமர் ஸ்ரீமாவோ பண்டாரநாயகா செனட் சபையில் கூறியதுபோல் யுத்தத்தில் மக்கள் ஈடுபட்டிருந்ததால்தான் இப்பிரச்சினை நிறுத்தி வைக்கப்படவில்லை. உண்மை என்னவென்றால் யுத்த சமயத்தில் சிங்களவர்களுக்கு வேலை வாய்ப்பு அதிகரித்ததால் அவர்கள் இந்திய வம்சாவளித் தொழிலாளர்களைப் பற்றி மறந்துவிட்டார்கள்.

யுத்தத்திற்குப் பின் பிரிட்டிஷ் ராணுவச் செலவு நின்றதற்குப் பின் வேலை வாய்ப்புக் குறைந்தன மீண்டும் இந்திய எதிர்ப்புக் கிளர்ச்சி தலை தூக்கிற்று.

### இடதுசாரி இயக்கத்துக்கு எதிரான ஆயுதம்!

இந்திய எதிர்ப்பு உணர்ச்சியைப் பயன்படுத்தி இடதுசாரி இயக்கத்தை நொறுக்கித் தள்ள முடியும் என்றும் டி.எஸ். சேனநாயகா கண்டார். 1947 தேர்தலில் தன் கட்சிக்குப் பரிபூரண பெரும்பான்மை கிட்டவில்லை என்பதைக் கண்டு அவர் எச்சரிக்கையடைந்தார். அந்தத் தேர்தலில் பிரிட்டிஷ் பிரஜைகளாக இருந்த இலங்கையில் வசிக்கும் அனைவருக்கும் ஓட்டுரிமை இருந்தது.

1947 தேர்தலில் இந்திய வம்சாவளித் தொழிலாளர்கள் நாடாளுமன்றத்திற்கு இலங்கை இந்தியக் காங்கிரசைச் சேர்ந்த 7 பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்க மட்டுமின்றி ஐக்கிய தேசியக் கட்சி வேட்பாளர்கள் 15 பேரைத் தோற்கடிப்பதற்கும் தங்கள் ஓட்டுக்களைப் பயன்படுத்தினர்.

இந்திய வம்சாவளியினரில் பெரும்பாலானோர் தொழிலாளர்கள் என்றும் ஆகவே வர்க்க எதிரி என்றும் அவர்கள் சிங்களவரிடையே முற்போக்கு பிரிவினருடன் சேர்ந்துகொண்டு ஏகாதிபத்தியத்துக்கும் முதலாளித்துவத்துக்கும் சாவுமணி அடிப்பார்கள் என்றும் டி.எஸ். சேனநாயகா கண்டார்.

1947ல் நடைபெற்ற ஒரு உபதேர்தலும் இதை ஊர்ஜிதப்படுத்துகிறது. அதில் இந்திய வம்சாவளித் தொழிலாளர் ஆதரவுடன் டி.பி. இலங்காரத்ன ஐக்கிய தேசியக் கட்சிக்கு எதிராக வெற்றி பெற்றார். இத்தோல்விக்குப் பின் கொழும்புக்குத் திரும்பிக் கொண்டிருக்கும் போதுதான் டி. எஸ். சேனநாயகாவும் குணதிலகாவும் இந்திய வம்சவாளித் தொழிலாளர்களைப் பழிதீர்க்கவும் அவர்களை ஓட்டளிக்க விடாதபடி தடுக்கவும் சபதமேற்றதாகக் கூறப்படுகிறது.

இலங்கை பிரஜா உரிமையை வரையறை செய்யவேண்டிய அவசியத்தின் பெயரால் இந்திய வம்சவாளித் தொழிலாளருக்கு ஓட்டுரிமை மறுக்கப்பட்டது.

எல்லா இந்திய பாகிஸ்தானி வம்சாவளியினரிடத்திலும் இலங்கை பிரஜா உரிமைக்கு மனுச்செய்யுமாறு கோரப்பட்டது, கடுமையான சோதனைக்குட்படுத்தினால் ஏராளமான சிங்களவர்களும், தமிழர்களும், முஸ்லீம்களும் தங்கள் பிரஜா உரிமையை நிரூபிக்க முடியாது என்று கூறப்படுவதில் நிரம்பவும் உண்மை உண்டு.

இந்திய வம்சாவளி தொழிலாளர்களுக்கு— தொழிலாளி வர்க்க முழுவதின் கணிசமான பகுதியான அவர்களுக்கு ஓட்டுரிமை மறுக்கப்பட்டது, இலங்கையின் இடதுசாரி முற்போக்கு இயக்கத்துக்கு பெரிய அடி என்பதில் சந்தேகமில்லை.

ஆனால் அப்போது இடதுசாரி இயக்கத்துக்குள் குறுகிய தேசிய இனவெறியும் வகுப்புவாதமும் பரவியிருந்தது. நாட்டிலிருந்த இந்திய எதிர்ப்பு உணர்ச்சியை டி. எஸ். சேனநாயகா லாகவமாக பயன்படுத்தும் போது இடதுசாரி இயக்கம் ஊசலாட்டம் காட்டியதால் எதிர்ப்பின்றியே அடியை வாங்க நேர்ந்தது.

தங்கள் பிரச்னைகளைத் தீர்க்க இந்திய அரசாங்கத்தையே எப்போதும் எதிர் நோக்கும் இலங்கை இந்தியக் காங்கிரசின் முதலாளி வர்க்கத் தலைமை போராட்டத்தை தொடுக்க முடியவில்லை. இவ்விதம் எந்த ஜனநாயக உரிமையுமின்றி தங்கள் நாடு என்று எதையும் அழைத்துக்கொள்ள முடியாத வெறும் மிருகங்கள் நிலைக்கு இந்திய வம்சாவளித் தொழிலாளர்கள் மாற்றப்பட்டனர். இப்போது நாடற்ற மக்கள் என்று அழைக்கப்படுபவர்கள் இப்படியே உருவானார்கள். ரத்தம் சிந்தாமலேயே பிரமாத வெற்றியை டி. எஸ். சேனநாயகா ஈட்டினார்.

தவிர ஒவ்வொரு தேர்தலிலும் இடதுசாரிகளை ஆட்சி பீடத்தில் அமர்த்தினால் இந்திய வம்சாவளித் தொழிலாளர்களுக்குஓட்டுரிமை அளித்துவட இலங்கையில் சிங்களவர்களை மூழ்கடிந்து விடுவார்கள் என்ற பூச்சாண்டியையும் ஐக்கிய தேசியக் கட்சி கிளப்பிவந்தது.

பிரச்னை அத்துடன் நிற்கவில்லை. இலங்கை' இந்தியத் தலைவர்கள் அடிக்கடிப் பேச்சு நடத்தினார்கள். இந்தப் பேச்சுக்களில் ஒன்று லண்டனில்

(4-ம் பக்கம் பார்க்க)

# இலங்கையும் இந்தியாவும் சோஷலிச நாடுகளான பிறகே பிரச்சினை தீரும்!

காமன்வெல்த் பிரதமர்களின் ம நாட்டின்போது நடந்தது. எத்தனைபேரை இந்தியா ஏற்றுகொள்ளும் என்ற அடிப்படையில் விவாதம் நடைபெற்றது. இது மனிதர்களைப் பற்றிய பிரச்னை என்றும் எந்த தேசத்தில் பிரஜையாக இருக்க அவர்கள் விரும்புகிருர்கள் என்பதைக் கேட்டறிவது அவசியம் என்றும் எத்தரப்புக்கும் படவில்லை.

### நேரு கொத்தலாவாலா ஒப்பந்தம்!

இருதேசப் பிரதமர்களும் ஒரு தீர்வுக்கு வந்ததாகவும் 50 ஆயிரம் பேரை என்ன செய்வது என்பது குறித்தே தடங்கல் ஏற்பட்டதாகவும் தெரிந்தது.

அடுத்த கூட்டமாக டில்லியில் நடைபெற்ற பேச்சுவார்த்தையில் நேரு—கொத்தலாவலா ஒப்பந்தம் ஏற்பட்டது.

ஆனல் இந்த ஒப்பந்தம் அமுலாகவில்லை. இருதரப்பினரும் கண்ணும் பூச்சி ஆடினர். ஒப்பந்தத்தின் உணர்வை இலங்கை மதிக்கவில்லை. சுமார் ஒரு லட்சம் பேருக்குத்தான் இலங்கை பிரஜா உரிமை கொடுக்கப்பட்டது. இந்தியப் பிரஜைகளின் பாஸ்போர்டுகளை வாபஸ் வாங்கி அவர்களும் இந்தியவம்சாவளியினர் என்று இலங்கையிலிருந்த இந்திய ஹைகமிஷினர் தேசாய் நிரூபிக்கப்பார்த்தார்.

### லட்சம் பேரின் தலைவிதி அந்தரத்தில்!

இந்தக் கட்டத்தில்தான் 1964-ல் ஸ்ரீமாவோ ஆட்சிக்கு வந்தார். மேலும் 3லட்சம் பேரை பிரஜைகளாகப் பதிவு செய்ய இலங்கை சம்மதித்தது மேலும் ஐந்தேகால் லட்சம் பேரை ஏற்க இந்தியா சம்மதித்தது. ஒன்னேகால் லட்சம் பேரின் தலைவிதி அந்தரத்தில் விடப்பட்டது.

ஸ்ரீமாவோ—சாஸ்திரி ஒப்பந்தம் ஏற்பட்ட சமயத்தில் ஸ்ரீலங்கா சுதந்திரா கட்சிக்கு எதிராக ஓட்டும்போட்ட பெடரல் கட்சியும், தமிழ் காங்கிரசும் இந்த ஒப்பந்தத்தைத்தான் காரணம் காட்டின. இன்று இக்கட்சிகள் பல்டி அடித்து இந்த ஒப்பந்தத்தை அமுலாக்கக் கோருகின்றன.

தேர்தலுக்கு முன்பாக இது குறித்து திட்ட வட்டமான நிலை எதையும் ஐக்கிய தேசியக் கட்சி எடுக்கவில்லை. சிங்களவர்களுக்கும் மைனுரிடிகளுக்கும் வெவ்வேறு வாக்குறுதிகளைக் கொடுத்து அது ஆசை காட்டியது.

ஆட்சிக்கு வந்த பின்னரே அது திட்டவட்டமான நிலையை எடுக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. எதிர்க்கட்சிகள் வகுப்பு வாத நிலை எடுத்ததின் காரணமாகஒப்பந்தத்தை அமுலாக்க அது வாக்குறுதி அளிக்க வேண்டி நேர்ந்தது.

''தேசிய'' அரசாங்கத்தில் பிரதிநிதித்துவப் படுத்தப்பட்டுள்ள பிற்போக்குகட்சிகளின் வர்க்க நலன்களில் காணும் ஒற்றுமை மிகவும் வலுவாக இருக்கிறது. ஆகவே மைனுரிகளின் இந்தப் பிற்போக்குத் தலைமை இந்த வர்க்க நலன்களைக் காப்பதற்காக இந்திய வம்சாவளியினரின் நலன்களுக்குப் போராடுவதைக் கைவிட நேர்ந்துள்ளது.

ஆகவே கட்சி அரசியலைப் பார்க்காது இப்பிரச்னையைத் தேசியப் பிரச்னையாகப் பார்க்குமாறுபெலிக்ஸ்பண்டாரநாகா விடுத்த வேண்டுகோள் நகைப்பைத் தருகிறது. இந்த வேண்டுகோளை முதலாளி வர்க்கம் எப்போதும் கொண்டிருக்கிறது.

### இது ஒரு வர்க்கப் பிரச்சினையே!

இந்திய வம்சாவளித்தொழிலாளர் பிரச்னை தேசியப் பிரச்னை அல்ல. அது ஒரு வர்க்கப் பிரச்னை. ஒரு நூற்ருண்டுக்குமேலாக இலங்கையின் அடிப்படைத் தொழிலாளி வர்க்கமாக இருந்த இலங்கையின் தேசிய செல்வத்தை பெருக்குவதற்கு காரணமாக இருந்த ஆனல் இனவழியில் இலங்கை மெஜாரிடியினருக்கு மாறுபட்ட இந்திய வம்சாவளித் தொழிலாளர் சம்பந்தமாக என்ன நிலையை வகிப்பது என்ற பிரச்னை இது.

இது வர்க்கப் பிரச்னைதான் என்பது மாறிமாறி வரும் ஐ. தே. கட்சி அரசாங்கமும் ஸ்ரீலங்கா சுதந்திரா கட்சி அரசாங்கமும் இந்திய வம்சாவளியில் வந்த சுரண்டும் சக்திகளுக்கு கௌரவப் பிரஜா உரிமை வழங்கத் தயாராக இருந்ததிலிருந்து தெரிகிறது. தொழிலாளர்கள் ஆளும் கட்சிக்கு நன்கொடை ரூபத்தில் லஞ்சம் தரமுடியவில்லை. அதனல் கௌரவப்பிரஜா உரிமையும் கிடைக்கவில்லை.

லங்கா சமசமாஜக் கட்சி போன்ற பழைய இடதுசாரிக் கட்சிகளும் வர்க்க அணுகும் முறையைக் கைவிட்டிருப்பது தான் பரிதாபமாகும். இலங்கைக்கு இந்தியர் குடியேற்றத்தைத் தடை செய்வதை எதிர்த்து அவருடைய கட்சி இரண்டாவது உலக யுத்தத்துக்குமுன் போலி சர்வதேசியத்தின் டெயரில் வகித்த நிலையை மறந்து லெஸ்லி குணவர்த்தன பிரதமரையும் மிஞ்சி நாடாளுமன்றத்தில் இந்திய எதிர்ப்புக் காட்டியுள்ளார்.

திரிபுவாத கெனமன் கோஷ்டியின் நிலையும் இதுவேஎனவேதான் இந்த இரு கூட்டமும் வட இலங்கை தோட்டத் தொழிலாளர்களிடம் தலைகாட்ட முடியவில்லை.

### தெளிவு இல்லை !

இந்த அரசியல் கட்சிகளிடம் கருத்தொற்றுமை காணப்பட்டாலும் ஒரு அம்சத்தில் தெளிவு இல்லை.

1) இந்திய இலங்கை அரசாங்கங்களே இப்பிரச்னையைத் தீர்க்க வேண்டும்.

2) இந்திய வம்சாவளியினருக்கு இலங்கை பிரஜா உரிமை வழங்க வேண்டும்.

3) இப்போதைவிட அதிகம் பேரை இந்தியா அங்கீகரிக்கவேண்டும்.

எல்லாம் சரிதான் ஒரு விஷயம்தான் தெளிவாகவில்லை. எந்த அடிப்படையில்இலங்கை பிரஜா உரிமையோ இந்தியப் பிரஜா உரிமையோ அளிக்கப்படவேண்டும்.

விரும்பாதவர்களுக்கு இந்திய அரசாங்கம் தன் பிரஜா உரிமையை அளிக்க முடியுமா?

மேலும் பலவந்தமாக இந்தியாவுக்கு மக்களை இலங்கை சர்க்கார் அனுப்ப முடியுமா? இது இயலாது என்றும் எந்த நாட்டின் பிரஜையாக இல்லாதவரையும் இந்த நாட்டிலிருந்து அனுப்ப முடியாது என்றும் நடாளுமன்ற விவாதத்தில் பிரதமமந்திரியே ஒப்புக்கொண்டுள்ளார்.

### சோஷலிச அமைப்பில்தான் பிரச்னை தீரும்

தற்போது இலங்கையிலும் இந்தியாவிலும் உள்ள ஏகாதிபத்திய-முதலாளித்துவ பொருளாதார அமைப்புக்குள் இப்பிரச்னையைத் தீர்க்க முடியாது என்பதுதான் உண்மை. இந்தியாவோ இலங்கையோ அல்லது இரண்டுமோ சோஷலிஸ்ட்நாடுகளாகமாறிய நிலையில்தான் அடிப்படை மனித உரிமைகளைப் பாதிக்காமல் நியாயமான தீர்வு காணமுடியும். அடிப்படையில் இது வேலை பற்றிய பிரச்னை. வளரும் சோஷலிஸ்ட் பொருளாதாரத்தில் தான் இதைத்தீர்க்க முடியும். சீனம்சோஷலிஸ்ட் நாடான போதுதான் வெளிநாடுகளிலுள்ள சீனர்கள் விரும்பினல் தாயகம் திரும்பலாம் என்றும் அவர்களுக்கு வேலையோ நிலமோ தரப்படும் என்றும் அழைப்பு விடுக்க முடிந்தது.

அக்காலம் வரும்வரை வகுப்பு வாத அரசியல் வாதிகள் முற்போக்கு இயக்கத்துக்கு மிகுந்த சேதம் விளைக்க இப்பிரச்னையைக் கையாண்டு கொண்டிருப்பர் அதுவரை எத்தனை ஒப்பந்தங்கள் ஏற்பட்டாலும் தீர்வு ஏற்படாது.

(இலங்கை கம்யூனிஸ்ட் கட்சி பத்திரிகையான ''ரெட் பிளாக்''கிலிருந்து)

---

# ஏஜெண்டுத் தோழர்களின் உடனடிக் கவனத்துக்கு !

ஏப்ரல் மாதபில் தொகையில் இன்னும் பாக்கி வைத்துள்ள தோழர்கள் இன்னும ஒரு வாரத்தில் பாக்கியை அனுப்பவேண்டும்.

ஏப்ரல் மாதப்பில் தொகையை ஏஜெண்டுத் தோழர்கள் உடனடியாக அனுப்பிவைக்கவில்லையானல் பத்திரிகை வெளிவருவதே பாதிக்கப்படும்.

நிர்வாகச் செலவுக்கு அவசர அவசியமாகத் தேவைப்படுகிறது. ஆகவே சற்றும் தாமதியாது பணத்தை அனுப்பிவைக்கக் கோருகிருேம்.

பழைய பாக்கியையும் ஏஜெண்டுத் தோழர்கள் வைத்துள்ள கணக்கின் படியே உடனடியாக அனுப்பி வைக்கக்கோருகிருேம். பழைய பாக்கிக்கான பில்கள் விரைவில் அனுப்பப்படும்.

—நிர்வாகி

தீக்கதிர்

---

# நெய்வேலி நிலக்கரிச் சுரங்க நிர்வாகத்தின் ஆணவப் போக்கு ! பேச்சு வார்த்தை முறிந்தது !

நெய்வேலியிலுள்ள மூன்று தொழிற்சங்கங்களைச் சார்ந்த (லிக்னைட் மைன்ஸ் லேபர் யூனியன், தொழிலாளர் முன்னேற்ற சங்கம் என்.எல்.சி. ஊழியர்கள் சங்கம்) 18 ஆயிரம் தொழிலாளர்கள் போனஸ், கிராஜுடி, பஞ்சப்படி உயர்வு முதலிய 19 கோரிக்கைகளுக்காக கடந்த 6 மாத காலமாகப் போராடி வருகின்றனர். நிர்வாகம் பேச்சுவார்த்தையின் மூலம் சுமுகமாக தீர்த்துக்கொள்ளத் தயாராக இல்லாத காரணத்தால் 17-4-67ல் வேலைநிறுத்த வாக்கெடுப்பு நடத்தினர். 13 ஆயிரம் தொழிலாளர்கள் இதில் கலந்துகொண்டு வாக்களித்தனர். 11,969 பேர் வேலை நிறுத்தத்திற்கு ஆதரவாகவும் 683 பேர் எதிர்த்தும் ஓட்டளித்தனர். 322 ஓட்டுகள் செல்லுபடி ஆகாதவை.

3-5-67ம் தேதி தமிழகத் தொழிலமைச்சர் திரு மாதவன் அவர்களை, எல்.எம்.எல் யூ. சங்கத்தின் கௌரவ தலைவர் கே. அனந்தன் நம்பியார் எம். பி. அவர்களும், சட்டமன்ற உறுப்பினர் எஸ். ராமச்சந்திரன் அவர்களும் மூன்று தொழிற்சங்கப் பிரதிநிதிகளுடன் சென்று நெய்வேலியிலுள்ள தொழிலாளர்களின் பிரச்சினை குறித்தும் வேலைநிறுத்த வாக்கெடுப்பு முடிவு குறித்தும் விளக்கமாக எடுத்துச் சொன்னர்கள். மந்திரி மாதவன் உடன் தலையிட்டு சுமூகமாகத் தீர்த்து வைப்பதாக வாக்குறுதி அளித்துள்ளார்.

வேலைநிறுத்த வாக்கெடுப்பு முடிவை மத்திய சுரங்க மந்திரி டாக்டர் சென்னுரெட்டி அவர்களிடம் டில்லியில் நேரில் எல்.எம்.எல்.யு.சங்கத்தின் கௌரவத் தலைவர் தோழர் கே. அனந்தநம்பியார் எம்.பி. அவர்களும், என்.எல்.சி. ஊழியர்சங்கத்தின்பொதுச்செயலாளர் வி.குப்புசாமி அவர்களும் 6-5-67ம்தேதி சந்தித்து எடுத்துச் சொன்னர்கள். கோரிக்கைகள் குறித்தும் விவரமாக எடுத்துச் சொன்னர்கள். மந்திரி தலையிட்டு சுமூகமாக பிரச்சினையைப் பேசி தீர்ப்பதற்கு நடவடிக்கை எடுத்துக் கொள்ளும்படிகேட்டுக்கொண்டனர். மந்திரி ஆவன செய்வதாக வாக்குறுதி அளித்தார்.

இதைத் தொடர்ந்து 11-5-67ம் தேதியன்று துணை தொழிலாளர் கமிஷனர் முன்னிலையில் கார்ப்பொரேஷன் நிர்வாகத்திற்கும் மூன்று சங்கப்பிரதிநிதிகளுக்கு இடையில் நடந்த பேச்சு வார்த்தையின் போது நிர்வாகம் ஐ.என்.டி.யு.சியுடன் மட்டுமே பேச்சு வார்த்தை நடத்துவோமென்று சொன்னதால் பேச்சு வார்த்தை முறிவடைந்தது.

---

## நன்கொடை

கோவை சிமெண்ட் தொழிலாளர் சங்கத் தலைவர் கே. ரமணி வெற்றி பெற்றதை யொட்டி 4-8-67ல் நடைபெற்ற வெற்றிவிழாக் கூட்டத்தில் தீக்கதிர் வளர்ச்சி நிதிக்கு ரூ 5-25 வழங்கப்பட்டது.

# கிரீஸ் இராணுவத்தினரின் பாசிச வெறிக் கலகம்!

# கலகத்தைத் தூண்டியது அமெரிக்க ஏகாதிபத்தியமே!

**கிரீஸ் தேசத்தில் பலாத்கார ஒடுக்குமுறை கட்டவிழ்த்து விடப்பட்டுள்ளது. கம்யூனிஸ்ட் தலைவரும், பாசிச எதிர்ப்பு யுத்த வீரருமான மனோலிஸ கிளிகோசை படுகொலை செய்ய அங்குள்ள பாசிச ஆட்சியாளர்கள் முயற்சித்துள்ளனர். கிரீசில் தற்போது அதிகாரத்திலுள்ள இந்த பாசிச வெறியர்களைக் கண்டித்து ஐரோப்பா முழுவதிலுமுள்ள கிரீஸ் தூதரகங்களின் முன்பு ஆர்ப்பாட்டங்கள் நடைபெற்றன.**

கிரீசில் சென்ற 21ம் தேதியன்று நடைபெற்ற ராணுவக் கலகத்தின் காரணமாக கலியாஸ் என்ற உயர்நீதி மன்ற நீதிபதியின் தலைமையில் ஒரு பாசிச ஆட்சி தோற்றுவிக்கப்பட்டுள்ளது, அரசாங்கத்தில் உள்ள மற்றவர்கள் அனைவரும் இராணுவத்தினரே. இப்போது ஜெனரல் ஸ்பான்டிடாசிஸ் என்ற பிரதான ராணுவத் தளபதி கலியாசுக்கு உதவியாளராகவும் தேசியப் பாதுகாப்பு மந்திரியாகவும் இருக்கின்றார்.

### மக்கள்மீது கடும் ஒடுக்குமுறை!

அரசன் கான்ஸ்டின்டைன் அரசியல் அமைப்புச் சட்டத்தின் கீழ் உத்தரவாதம் செய்யப்பட்டுள்ள பேசுவதற்கும் கூடுவதற்கும் உள்ள சுதந்திரத்தையும் கூட மக்களிடமிருந்து பறித்துள்ளார். இவர் எலிசபெத் மகாராணியாரின் கணவனாரின் மருமகனாவார்.

ரேடியோ ஏதென்ஸ் தினத்திற்கொன்றாக ஏராளமான உத்தரவுகளை இப்போது பிறப்பித்து வருகிறது. கால வரையின்றி யாரைவேண்டுமானாலும் சிறை வைக்கலாம் என்பது அதில் ஒன்று. கூட்டம் நடத்துவதற்கும் வேலை நிறுத்தம் செய்வதற்குமுள்ள உரிமைகள் பறிக்கப்பட்டு விட்டன. யாரை வேண்டுமானாலும் சோதனை போடலாம் என்றும், இருட்டிய பிறகு தெருவில் யார் தென்பட்டாலும் சுட்டுச் சொல்லலாம் எனவும் உத்தரவிடப்பட்டுள்ளது.

அங்குள்ள ஐக்கிய ஜனநாயகக் கட்சி என்ற இடதுசாரிக் கட்சி தடை செய்யப்பட்டுள்ளது. இதை கம்யூனிஸ்டுகளின் தளமாக உள்ள கட்சியாக புதிய பாசிச ஆட்சியாளர்கள் கருதுவதே இதற்குக் காரணமாகும். பத்தாயிரத்திற்கும் மேற்பட்டோர் கைது செய்யப்பட்டு காராகிரகத்தில் அடைக்கப்பட்டுள்ளனர். நகரங்களில் அசாதாரணமான ராணுவக் கோர்ட்டுகள் அமைக்கப்பட்டுள்ளது. ராணுவத்தினர் இடைவிடாது ரோந்து சுற்றி வருகின்றனர். ஏதென்ஸ் நகரம் முழுவதிலும் துப்பாக்கி வேட்டுகளின் சத்தத்தைஇரவுநேரங்களில்கேட்பது வழக்கமாகி விட்டது. பத்திரிகை தணிக்கை கடுமையாக்கப்பட்டுள்ளது. ராணுவ வானொலி நிலையம் தொடர்ந்து முன்பிருந்த பாசிச சர்வாதிகாரியான மெதாகாஸ் காலத்திய ராணுவ அணி வகுப்புகள் பற்றியும், மக்களிடையே தேசிய இனவெறியை தூண்டிவிடும் வகையில் கோஷங்களையும் இடைவிடாது ஒலிபரப்பிவருகின்றது.

### தேர்தலை தடுக்கும் சூழ்ச்சியே இக்கலவரம்!

மே மாதம் 28ம் தேதி நடைபெறவிருந்த பொதுத் தேர்தலை நடத்த வொட்டாது தடுக்கவே ஏப்ரல் 21ம் தேதி கலகம் நடத்தப்பட்டது. இப்போது பொதுத் தேர்தல் தடைசெய்யப்பட்டு விட்டது என்பது பற்றி செய்திகள் வந்துள்ளது. புதிய அரசாங்கத்தையும் கலகத்தையும் ஆதரித்து துதிபாடும் இரண்டு பிரதான நாளேடுகள் மே மாதம் 28ம் தேதியன்று பாராளுமன்றத் தேர்தலை நடத்தத் தீர்மானித்ததே ஒரு "அரசியல் தவறாகும்" எனக் குறிப்பிட்டுள்ளன.

நிர்ணயித்திருந்தபடி தேர்தல் நடந்தால் 79 வயது நிரம்பிய மத்திய ஐக்கிய கட்சியைச் சேர்ந்த ஜார்ஜ் பொபாண்டிரியோஎன்றமுன்னாள் பிரதமர் பெரும் வெற்றி பெறுவார் என்பதை அரசரும் இராணுவத்தினரும் தெளிவாக அறிவர். இரண்டாண்டுகளுக்கு முன்னால்தான் அரசர் பொபாண்டிரியோவுக்கு எதிராக ஒரு அரண்மனைப் புரட்சியை நடத்தி வெற்றி கண்டார்.

### அமெரிக்கத் தூண்டுதல்!

அப்போது ராணுவத்தினுள் பொறுப்பான பதவிகளில் இருந்துகொண்டு, அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகளின் தூண்டுதலால் அரசாங்கத்திற்கு அச்சுறுத்தலாக இருந்துகொண்டிருந்த பாசிச அதிகாரிகளை பாதுகாப்புப் படையிலிருந்து களையெடுக்க பொபாண்டிரியோ முயற்சி செய்தார்.

அப்போது பாதுகாப்பு அமைச்சராக இருந்த கரோபாலியாஸ் இதைக் கடுமையாக எதிர்த்தார். பிரதம மந்திரி ராஜினாமாச் செய்ய வேண்டுமென வற்புறுத்தினார். ஆனால் அரசரோ இதற்கெல்லாம் மேலே சென்று ஜனநாயகத்தையே பச்சைப் படுகொலை செய்து பொபாண்டிரியோவை அதிகாரத்தில் இருந்து விரட்டினார், இவருக்கு பதில் அதனாசியாடிஸ் நோவாஸ் என்பவரை பிரதமராக அரசர் நியமித்தார். இவரும் பாராளுமன்றத்தில் ஏற்பட்ட பெருந்தோல்வி காரணமாகப் பதவியை ராஜினாமாச் செய்ய நேரிட்டது. ஆனால் அரசரோ மீண்டும் பொபாண்டிரியோ கையில் அதிகாரத்தை ஒப்படைக்கவோ அல்லது புதிய தேர்தல்களை நடத்தவோ மறுத்துவிட்டார்.

இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் அரசரும் ராணுவத்தினரும் இப்போது தேர்தல் நடத்தினால் தங்களுக்குச் சாதகமாக இருக்குமென கருதினர்போலும். தேர்தலுக்கான தேதி நிர்ணயிக்கப்பட்டது. ஆனால் தேர்தல் பிரச்சாரம் தொடங்கியதும் கிரேக மக்களின் ஆதரவு பொபாண்டிரியோவுக்கும் இடதுசாரிக் கட்சிகளுக்கும்தான் இருக்கிறது என்பதை அவர்கள் கண்டுகொண்டனர்.

இம்முறை பொபாண்டிரியோ வெற்றி பெற்றால் பாசிச ராணுவ தளபதிகளின் வால் நறுக்கப்படும் என்பதை அரசர் உணர்ந்தார். நவீன வரலாற்றில் பல கிரேக்க அரசர்கள் பதவியை இழக்க நேர்ந்ததல்லவா அக்கதியே தனக்கும் ஏற்படுமென அஞ்சினார்.

இதை தடுப்பதற்காகத்தான் இந்தப் பாசிசக் கலகம் தூண்டப்பட்டுள்ளது. மத்திய ஐக்கிய ஜனநாயகக் கட்சி போன்றவற்றின் தலைவர்களும் பொபாண்டிரியோவும் அவரது புதல்வரும் சிறைப்படுத்தப் பட்டுள்ளனர்.

### அமெரிக்க உளவுஇலாகா நடத்திய புரட்சியே இது!

இந்த பாசிசக் கலகத்தில் அமெரிக்காவின் கை அதிகமாக உள்ளது. ஏன் 1965 ஜூலை மாதத்திய அரண்மனை புரட்சி பற்றி "எதநோஸ்" என்ற கிரேகத் தலைநகரான ஏதென்சிலிருந்து வரும் ஒரு பத்திரிகை அமெரிக்க ராணுவத்திலுள்ள உளவுப் பிரிவின் துணை தளபதி ஒருவரின் கடிதத்தை பிரசுரித்துள்ளது. இந்த அரண்மனைப் புரட்சியையும் அமெரிக்க உளவு இலாகாவே நடத்தியதென்பதில் ஐயமில்லை.

இந்த பாசிசக் கலகத்துக்கு சில நாட்களுக்கு முன்னர்தான். அமெரிக்க தூதர் கிரீஸ் அரசு மாளிகைக்கு விஜயம் செய்தார். அமெரிக்க நாளேடுகள் கிரேக்க ராணுவ தளபதிகளை வானளாவப் புகழ்ந்தன. "நியூயார்க் டைம்ஸ்" என்ற அமெரிக்கப் பத்திரிகை பல நாட்களுக்கு முன்னரே கிரீசில் நடைபெறும் ராணுவச் சதிபற்றி பகிரங்கமாக ஒரு கட்டுரையை வெளியிட்டிருந்தது. மே தேர்தலில் பொபாண்டிரியோவின் கட்சிக்கு கிடைத்திருக்க வேண்டிய பெரும் வெற்றியை உடைக்க இராணுவம் இக்கலகத்தின் மூலம் ஒத்துழைத்துள்ளது. கிரீசில் உள்ள அயல்நாட்டு தூதுவர்களுக்கிடையில் புதிய பிரதமரைச் சென்று சந்தித்த அதுவும் கலகம் நடைபெற்ற நாளன்றே சென்று சந்தித்த ஒரே தூதுவர் அமெரிக்க தூதுவர் மட்டும்தான்.

கிரீஸ் மக்கள், புதிய பாசிச ஆட்சியை அமெரிக்க ஏகாதிபத்தியத்துடனும் நேட்டோவுடனும் நெருங்கிய தொடர்புக் கொண்டுள்ள ஒரு ஆட்சியாகவே காண்கின்றனர்.

---

## மதுரையில் மேதினம்!

1-5-67ம்தேதியன்றுஉலகத் தொழிலாளி வர்க்க தினமாகிய "மே" தினத்தை மதுரையில் தொழிற் சங்கங்களும் அரசியல் கட்சிகளும் சிறப்பாக கொண்டாடின. அன்று காலையில் மதுரை நகரில் சுமார் 400 செங்கொடிகள் ஏற்றப்பட்டன. தொழிற் சங்கங்களில் காலையில் கொடியேற்று விழா நடைபெற்று இனிப்புகள் வழங்கப்பட்டது.

மாலை 6 மணிக்கு ஜான்சி ராணி பார்க்கிலிருந்து மாபெரும் ஊர்வலம் புறப்பட்டது. கரக ஆட்டம், மயில் ஆட்டம் குதிரை ஆட்டம் போன்ற பல ஆட்டங்கள் பங்குகொண்டு ஊர்வலத்தைச் சிறப்பித்தது. மேலும் அலங்கரிக்கப்பட்ட பல ரதங்கள் ஊர்வலத்தில் பங்கு கொண்டது.

இறுதியில் இரவு 9 மணிக்கு திலகர் திடலில் பொதுக்கூட்டம் ஆரம்பமாகியது. தமிழ் நாடு மின்சாரபோர்டு தொழிலாளர் சங்க உபதலைவர் தோழர் மன்னார்சாமி தலைமை தாங்கினார். மதுரை பஞ்சாலை தொழிலாளர் சங்கத்தின் சார்பாக தோழர் மே. முனியாண்டி, மதுரை பொதுத் தொழிலாளர் சங்கத்தின் சார்பாக தோழர் கே. வாசுதேவன், மதுரை மோட்டார் தொழிலாளர் சங்கத்தின் சார்பாக தோழர் வி. எஸ். மணி, மதுரை மாவட்ட பொதுத் தொழிலாளர் சங்கத்தின் சார்பாக தோழர் எம். என். ஆதிநாராயணன் ஐக்கிய கைநெசவுத்தொழிலாளர் சங்கத்தின் சார்பாக தோழர் குமாரசாமி, கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பாக தோழர் என். சங்கரய்யா எம்.எல்.ஏ. சம்யுக்த சோஷலிஸ்ட் கட்சியின் சார்பாக தோழர் எஸ்.வி.கே. தாஸ் ஆகியோர் பேசினர்.

"மே" தினத்தை சம்பளத்துடன் கூடிய விடுமுறையாக மாற்றப்பட வேண்டும் என்று வலியுறுத்தப்பட்டது.

தமிழரசுக் கழகத்தின் சார்பாக கவிஞர் வெங்கிடாசலம் தடாரி இசை நிகழ்சி அளித்தார்.



---

## புரிந்துகொண்டதே அவ்வளவுதான்!

நமது நாட்டிலுள்ள டாங்கே திருத்தல்வாதக் கும்பல் தங்களின் சர்வதேச நண்பர்களை விசுவாசத்துடன் பின்பற்றுகின்றனர். அவர்களைப் போலவே இவர்களும் வியட்நாம் மக்களைக் கொன்று குவித்துவரும் கொலை பாதகனும், சதிகாரனும், உலக மக்களின் முதல் நம்பர் விரோதியுமான லிண்டன் ஜான்சனின் தேர்தல் வெற்றியை அமெரிக்காவில் உள்ள மிருதுவான மனோபாவம் கொண்ட நபர்களுக்கு கிடைத்த வெற்றியாகும் என்று புகழ்ந்து கூறினார்.

சமீப காலம் வரை இவர்கள் அமெரிக்க அபாயத்திற்குத் திரைபோட்டு சோவியத் உதவியை வானளாவப் புகழ்ந்தனர் தங்களின் போராட்டத்தை அமெரிக்காவுக்கு எதிராக நடத்துவதற்குப் பதில் சீனாவுக்கு எதிராக நடத்தி, சீனா பற்றிய அவதூறுகளை உலகெங்கும் பரப்பி யதார்த்தத்தில் சீனா மீது அமெரிக்கா தாக்குதலைத் தொடுப்பதற்கான தயாரிப்புக்களைச் செய்து கொடுத்தனர்.

இதுபோன்ற நச்சுப் பிரசாரங்களால் உலகெங்குமுள்ள மக்களின் விழிப்புணர்வு மந்தப்பட்டுள்ளதை பயன்படுத்தி அமெரிக்கா அட்டூழியங்களை நடத்தி வருகிறது, திருத்தல்வாதிகள் தங்களின் அவதூறுப் பிரச்சாரத்தின் மூலம் அமெரிக்க ஏகாதிபத்தியமும் நமது ஆளும் வர்க்கங்களும் எதை விரும்புகிறார்களோ அதையே செய்து வருகின்றனர். லெனின் ஏகாதிபத்தியம் பற்றி எழுதியவற்றை இவர்கள் புரிந்துகொண்ட முறை இதுதான் போலும்.

—பி. டி. ரணதிவே

## கோவாவில்

# வலதுசாரிக் கட்சியிலிருந்து விலகினர் !

# கம்யூனிஸ்ட்டுக் கட்சி (மார்க்சிஸ்ட்)யுடன் சேர்ந்தனர் !

**கோவா மாநில கம்யூனிஸ்ட்டுகள் ஏப்ரல் 16ம் நாளன்று வாஸகோடகாமா என்ற இடத்தில் நடைபெற்ற விசேஷ அகில கோவா மாநாட்டில் டாங்கே திருத்தல்வாதக் கூட்டத்துடன் கொண்டுள்ள தொடர்பை துண்டித்துக் கொள்வதெனவும் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)யில் சேர்வது எனவும் தீர்மானித்துள்ளனர். பிரபல தொழிற்சங்கத் தலைவரும் கம்யூனிஸ்ட் தலைவரும் ஆன தோழர் ஜெரால்டு பெரைரா தலைமையில்நடைபெற் ற இந்தசிறப்புமாநாட்டில் கோவாவிலுள்ள ஐந்து கட்சிக் கிளைகளிலிருந்து 200க்கும் மேற்பட்ட பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.**

திரு. நாராயண தேசாயால் தலைமை தாங்கி நடத்தப்படும் டாங்கே கூட்டம் முற்றாக தனித்தொதுக்கப்பட்டது. அவரும், கோவா கட்சிக் கிளையின் முன்னாள் செயலாளரான திவாகர் ககோட்கரும் (தற்போது வெளியேற்றப்பட்டவர்) பூர்ஷுவாக்களுடன் தீவிரமாக ஒத்துழைத்துக் கொண்டு கட்சியை சீர்குலைக்கவும், கலைக்கவும் எடுத்துக்கொண்ட முயற்சிகள் முறியடிக்கப்பட்டன. திருத்தல் வாதிகளுக்கு 30 பேருக்கு மேற்பட்டோரின் ஆதரவு கிடைக்கவில்லை. தொழிற்சங்கங்கள், கிசான் சபா போன்ற வெகுஜன ஸ்தாபனங்களைச் சீர்குலைப்பதற்கும் உடைப்பதற்கும் ஆன திருத்தல் வாதிகளின் முயற்சிகள் படுதோல்வியுற்றன.

மாநாட்டிற்கு வருகை தந்திருந்த பிரபலமான வெகுஜன ஸ்தாபனங்களின் தலைவர்களின் பெயர்கள் வருமாறு கோவா மாநில தொழிற்சங்க கவுன்சில் தலைவரும் அகில இந்திய தொழிற்சங்க காங்கிரசின் பொதுக் கவுன்சில் உறுப்பினரும், துறைமுகத் தொழிலாளர் சங்கச் செயலாளரும் ஆன தோழர் ஜெரால்டு பெரைரா, கோவா சுரங்கத் தொழிலாளர் சங்கச் செயலாளரும், கோவா விவசாயிகள் சங்கத் தலைவரும் ஆன தோழர் ஜார்ஜ் வஸ், மஸ்கான் துறைமுகத் தொழிலாளர் சங்கச் செயலாளர் எஸ். வி. ராவ், பபால் ஹர்மால்கர் தலைவரும் மர்ம கோவா துறைமுகத் தொழிலாளர் சங்கப்பொருளாளரும் ஆன தோழர் இப்ராஹீம் சாலமென் மற்றும் பல்வேறு பிரபல தொழிற்சங்கங்களின் தலைவர்களான ஏ.எம். பெய்க், ஷாம் சாலங்குட்சார், ஜே.பி. எக்ஸ், டிக்ரூஸ், எஸ்.எஸ் பாண்சில் டியூபிலோ அராஜோ ஆகியோரும் இன்னும் பல தொழிற்சங்கத் தலைவர்களும் கலந்து கொண்டனர்.

### தேர்தல் மறுபரிசீலனை !

கோவா மாநில சட்டமன்றத்திற்காக அண்மையில் நடைபெற்றதேர்தல்முடிவுகள் குறித்து இந்த மாநாட்டில் பரிசீலிக்கப்பட்டது. தேர்தலில் காங்கிரஸ் அடியோடு தோற்கடிக்கப்பட்டது குறித்து மாநாடு திருப்தி தெரிவித்தது. கம்யூனிஸ்ட் கட்சி தேர்தலில் போட்டியிடவில்லை. கட்சியின் மூன்றுஉறுப்பினர்கள்சுயேச்சை வேட்பாளர்களாக போட்டியிட்டனர். கோவா மாநிலத்தின் இரண்டு பிரதான கட்சிகளான மஹாராஷ்டிரவாடி கோமந்தக் கட்சியும், ஐக்கிய கோவானியர்களின் கட்சியும் வகுப்பு வாதத்தைக் கட்டவிழ்த்து விட்டதால் இந்த மூன்று வேட்பாளர்களும் தோல்வியடைந்தனர்.

ஆளுகின்ற கட்சியானமஹாராஷ்டிரவாடி கோமந்தக் கட்சி தன்னுள் சில சீர்திருத்தவாத, மிதவாத நபர்களைக் கொண்டிருந்த போதிலும் அடிப்படையில் நிலப்பிரபுக்களால் ஆதரிக்கப்படும் ஒரு முதலாளித்துவக் கட்சியாகும் கோவா தேர்தலில் வகுப்பு வெறியர்கள் ஜாதி வெறியர்கள் ஆகியோரின் தீவிரமான பங்கு இருந்த ால் கோவாவின் தேர்தல் முடிவுகள் ஜனநாயக இயக்கத்திற்கும், தற்காலிகத் தோல்வியைத் தந்துள்ளன என்ற தீர்மானத்தை மாநாடு நிறைவேற்றியது.

மஹாராஷ்டிரவாடி கோமந்தக் கட்சிக்கு மில் சொந்தக்காரர்கள் முதலாளிகள், பெரிய ஜமீன்தார்கள் வியாபார முதலாளிகள், அந்நிய ஏகபோக வாதிகள் ஆகியோர் வெளிப்படையாக ஆதரவு தந்ததையும் தீர்மானம் சுட்டிக் காட்டியது.

### வகுப்புக் கலவரங்களுக்காக

எல்லா வகுப்பினரிடையேயும் சௌஜன்ய நிலையையும், நல்லுறவையும் வளர்க்கவும் கோவாவின் உண்மையான முன்னேற்றத்திற்காக எல்லா முற்போக்கு ஜனநாயக கட்சிகளுடனும் சேர்ந்து பணிபுரியவும் கம்யூனிஸ்ட் கட்சி உறுதி மேற்கொண்டது.

இந்த நோக்கத்தை கணக்கில் கொண்டு கட்சி லெப்டினெண்ட்கவர்னருடையசட்டமன்றத் துவக்க உரையை கீழ்வருமாறு விமர்சித்தது. "இன்னும் ஏழைமக்களை திவாலாக்கும் தவறான திசை வழியில் ஓர் படியாக உள்ளது. ஏனென்றால் இவ் உரையில் மக்களை எதிரிட்டுள்ள அடிப்படைப் பிரச்சினைகளைத் தீர்க்க எந்த உருப்படியான திட்டமும் இல்லை."

லெப்டினெண்ட் கவர்னருடைய உரையே மாநாடு ஆழமாகப் பரிசீலித்தது. இது மஹாராஷ்டிரவாடி கோமந்தக் கட்சி அரசாங்கத்தின் கொள்கை அறிக்கையாகும். மக்கள் முன்னால் உடனடியாக தீர்க்கப்படுவதற்கு உள்ளபிரச்சினைகளை அவசரமாகத் தீர்க்காவிட்டால் ஏற்படும் விளைவுகளைக் குறித்து கட்சி, அரசாங்கத்தை எச்சரித்தது.

அரசாங்கம் உடனடியாக அமுல் நடத்துவதற்காக கீழ்வரும் குறைந்த பட்சத்திட்டத்தை கட்சி முன் வைத்துள்ளது.

பெருநிலச் சொந்தக்காரர்களிடம் உள்ள அரிசியை அரசாங்கமே கொள்முதல் செய்ய வேண்டும். வெளி மாநிலங்களிலிருந்து தானியத்தை அதிகமாக பெறவேண்டும். தற்போது தரும் அரிசி அளவான 80 கிராம் என்பதை நபருக்கு நாளைக்கு 180 கிராமாக உயர்த்த வேண்டும்.

மக்களின் வாழ்க்கைக்கு மிகவும் தேவைப்படுவையான அத்தியாவசியப் பொருள்களை குறைந்த விலையில் கிடைக்கச் செய்யவும் விலைவாசியை ஏறாமல் தடுக்கவும் வேண்டும்.

தொழிலாளிகள், விவசாயிகள், குறைந்த வருமானமுள்ளவர்கள் ஆகியோர் மீதுள்ள நேரடி மறைமுக வரிகளைக் குறைக்க வேண்டும்.

கோவாவுக்கு வாழ்க்கைப் புள்ளிக் கணக்கைத் தயாரிக்க வேண்டும். எல்லா தொழிற்சாலைகளிலும் வியாபாரதுறைகளிலும் உள்ளோருக்கும் மத்தியதர சிப்பந்திகள் அரசாங்க சிப்பந்திகள் ஆகியோருக்கும் பஞ்சப்படி தரவேண்டும்.

உயர்நிலைப் பள்ளிப் படிப்பை இலவசமாக்க வேண்டும். குறைந்த வருமானமுள்ள மாணவர்களுக்கு கல்லூரி படிப்புக்கு சலுகை தரப்பட வேண்டும்.

நில உடமையாளர்கள் குடியானவரை நிலத்திலிருந்து வெளியேற்றுவதைத் தடுப்பதற்கும், குடியானவனின் நிலத்திற்கும் வீட்டிற்கும் பாதுகாப்பு அளிக்கவும் சட்டங்கள் இயற்றப்பட வேண்டும்.

உழுவதற்கேற்ற அரசாங்கத் தரிசு நிலங்களையும் நில மற்ற விவசாயிகளுக்கும் விவசாயத் தொழிலாளருக்கும் விநியோகிக்க வேண்டும்.

குறைந்த வகையில், குறைந்த வருமானமுள்ளோருக்கும், சுமாரான வருமானமுள்ளோருக்கும் வீட்டு வசதி செய்து தரப்பட வேண்டும்.

கிராமங்களுக்கு மின்சார வசதியும், பாதை சீரமைத்துக் கொடுத்தலும். நகரங்களுக்கு குடிநீர் வசதியும் செய்து தர வேண்டும்.

மருத்துவ மனைகளை இன்னும் அதிகமாகக் கட்ட வேண்டும், சுகாதாரத்திற்கான திட்டங்களை அபிவிருத்தி செய்ய வேண்டும்.குறிப்பாகச்சுரங்கப் பகுதிகளுக்கு இந்த வசதிகள் தரப்பட வேண்டும்.

பொதுத்துறையில் தொழிற்சாலைகளை திறக்க வேண்டும். கூட்டுறவு சொசைட்டிகளுக்கு ஆதரவு தரவேண்டும். கிராமப் புறங்களில் விவசாயத்திற்கென கூட்டுறவு பண்ணைகளை அமைக்க வேண்டும்.

### வெகுஜனப் போராட்டங்கள்

இந்தகோரிக்கைகளை அமுல் நடத்த கம்யூனிஸ்ட் கட்சி போராடும். தயாநந்த் பண்டோகரின் புதிய அரசின் கொள்கை அறிக்கையில் இந்தக் கோரிக்கைகள் புறக்கணிக்கப்பட்டுள்ளன. அதே நேரத்தில் கம்யூனிஸ்ட் கட்சி, அரசாங்கத்தால் கொண்டு வரப்படும் முற்போக்கான திட்டங்களை ஆதரிக்கும்.

கம்யூனிஸ்ட் கட்சியின் செயலாளர் தோழர் ஜார்ஜ் வாஸ் மக்களின் நலனுக்கேற்ற திட்டங்களைத் தீட்ட தமது அறிக்கையில் வற்புறுத்தினார்.

நான்காவது திட்டத்தில் ரூ. 40·24 கோடியை திட்டக் கமிஷன் கோவாவிற்கு ஒதுக்கியுள்ளது, இவ்வாண்டிற்கான தொகை இதில் ரூ. 7·25 கோடியாகும். இந்த பெருந் தொகையை விரயமாகாதபடியும் திட்டமென்ற பெய

(7ம் பக்கம் பார்க்க)

# உண்மையை ஒப்புக்கொள்ளும் துணிவு

## வலதுசாரிகளுக்கு உண்டா?

### ஏ. பாலசுப்பிரமணியம் எம்.எல்.ஏ.

உண்மையையொப்புக்கொள்ள நேர்மை வேண்டும். உண்மையை ஒப்புக்கொள்ள துணிச்சல் வேண்டும். இந்த இரண்டும் நமது வலதுசாரிகளிடம் பூஜ்யம். தற்சமயம் அவர்களுக்கும் நமக்கும் 'ஒற்றுமை' ஏற்பட வேண்டும் என்று அதிகமாகப் பேச ஆரம்பித்துள்ளனர். கல்கத்தாவில் அவர்களது தேசிய கவுன்சில் கூடி எடுத்துள்ள நிலைகளில் இது முக்கியமான ஒன்று என்று கூறப்படுகிறது.

**திருத்தல்வாதிகளின் சாகசம்!**

'ஒற்றுமை' வேண்டும் என்ற உணர்வை, உழைப்பாளர்கள் மத்தியிலும் அவர்களது இயக்கங்களை ஒட்டியுள்ள பகுதிகளின் மத்தியிலும், நடுத்தர வர்க்க படிப்பாளிகள் மத்தியிலும் உள்ள இந்த உணர்வை கொஞ்சம் சுரண்டிக்கொள்ளலாம் என்று வலதுசாரிகள் நினைக்கிறார்கள் போலும். இந்த இரண்டும் ஒன்றாக இருந்திருந்தால்பிளவுஏற்படாமல்இருந்திருந்தால் தேர்தலில் அதிகமான கம்யூனிஸ்டுகள் பாராளுமன்றத்திலும், சட்டமன்றங்களிலும் வந்திருக்க முடியுமே என்ற மேலோட்டமான உணர்வைப் பயன்படுத்திக்கொள்ளவும், தாங்கள் எப்பொழுதுமே ஒற்றுமைக்கு இருந்ததாகவும், இப்பொழுதும் ஒற்றுமைக்காக உருகிக் கொண்டிருப்பதாகவும் காட்டிக்கொள்ளவும், அப்படி அவர்கள் உருகியும் இந்தப் பொல்லாத இடதுகள் பிடிவாதமாக ஒற்றுமைக்கு எதிராக இருப்பதாகவும் ஒரு கருத்தை உண்டாக்க முயற்சிக்கின்றனர். இந்த சாகசம் குறித்து நாம் சற்று ஆராய்வது அவசியமாகிறது.

**ஒற்றுமை எதற்கு!**

ஒற்றுமை எதற்கு? யாருக்கும் யாருக்கும் ஒற்றுமை? இவை இரண்டும் மிக முக்கியமான அடிப்படையான கேள்விகள்—ஒற்றுமை எதற்கு? ஜனநாயகப் புரட்சிக்காக ஒற்றுமையா அல்லது ஜனநாயகப் புரட்சியை நிறைவேற்றாமல் இருப்பதற்கா? முந்தியதென்றால் அது வேண்டும்.

பிந்தியதுஎன்றால்அது ஒற்றுமையாகாது என்பது மட்டுமல்ல. அது சீரழிவும் ஆகும். வலதுகளின் நிலை ஜனநாயகப் புரட்சிக்கான நிலை தானா என்பதே அடிப்படையான கேள்வி.

**திருத்தல்வாதிகளின் திட்டம் சொல்வதென்ன?**

அவர்களது கண்ணோட்டத்தில் அவர்களது திட்டத்தின் அடிப்படைக் கருத்துக்களைப் பார்க்குமிடத்து கீழ்க்கண்ட விஷயங்கள் தெளிவாகின்றன.

1. காங்கிரஸ் கட்சி ஏகாதிபத்திய எதிர்ப்புப் போக்கு கொண்ட தேசிய பூர்ஷ்வாக்களின் தலைமையில் உள்ள கட்சி.

2. பிரதானமாக, காங்கிரஸ் ஜனநாயக சக்திகள் அதிகம் கொண்ட கட்சி.

3. அதன் உள்நாட்டு, அயல் நாட்டுக் கொள்கைகள், பிரதானமாக முற்போக்கானவை

4. நாட்டில் உள்ள வலதுசாரிப் பிற்போக்கு சக்திகள், பிரதானமாக சுதந்திரா ஜனசங்கம், தி.மு.க. முஸ்லீம் லீக், அகாலிக் கட்சி போன்றவைகளில் திரண்டுள்ளன.



5. இவை காங்கிரஸ் அனுசரிக்கும் முற்போக்குக் கொள்கைகளையும் ஜனநாயக முன்னேற்றத்தையும் இன்றே அழித்து ஒழிக்கும் நிலைக்கு வளர்ந்துள்ளன.

6. இந்தக் கட்சிகளில்தான் வலதுசாரி பிற்போக்கு சக்திகளின் மிகப் பெரும் பகுதி இருக்கின்றது. அதாவது பெருமுதலாளித்துவ சக்திகளும் நிலப்பிரபுத்துவ சக்திகளும் ஏகாதிபத்திய ஆதரவு சக்திகளும் பிரதானமாக இக்கட்சிகளில்தான் உள்ளன.

7. ஒப்பு நோக்கிப் பார்க்கும் பொழுது, காங்கிரசுக்குள்ளிருக்கும் பிற்போக்கு சக்திகள் குறைவானவை.

8. ஆகவே காங்கிரசுடன் ஒருவிதமானஐக்கிய முன்னணி அமைத்துக்கொண்டு, மற்ற (மேலே சொன்ன) கட்சிகளையும் காங்கிரசுக்குள்ளே உள்ள பிற்போக்கையும் எதிர்க்க வேண்டும்.

9. இவ்வாறு செயல்படும் பொழுது, காங்கிரசில் உள்ள பிற்போக்கு வெளியே தள்ளப்படும் நிலை உருவாகும். அதாவது அவர்கள் கணக்குப்படி பிற்போக்காளராக மொரார்ஜியும், எஸ்.கே. பாட்டீலும் வெளியேற்றப்பட்டு விடுவர்.

10. இவ்வாறு சுத்தம் செய்யப்பட்ட காங்கிரசும் இவர்களும் சேர்ந்து தேசிய ஜனநாயகமாக ஆகிவிடுவர்! தேசிய ஜனநாயகப் புரட்சி முடிந்தது.

11. இந்த தேசிய ஜனநாயகப் புரட்சியில் தொழிலாளி வர்க்கத்தின் தனித் தலைமை இல்லை.பூர்ஷ்வாக்களின் தனித் தலைமையுமில்லை ......... அதாவது இந்த இரண்டு வர்க்கங்களின் கூட்டுத் தலைமை... அதாவது இன்று தேசிய பூர்ஷ்வாக்களின் அரசாக இருப்பது இனி தொழிலாளி வர்க்கத்துக்கும் சமபங்கான அளவாவது தலைமையில் இடமளிக்கும் அரசாகும்...அதாவது இன்றுள்ள பூர்ஷ்வா அரசை புரட்சிகரமாக தூக்கியெறிய வேண்டியதில்லை ... நொறுக்கிவிட்டு புதிய அரசு ஒன்றை நிறுவவேண்டியதில்லை. தேசிய பூர்ஷ்வாக்களின் அரசு தேசிய ஜனநாயக அரசாக மாறிவிடும்...அதாவது புரட்சி இல்லாமலே காரியம் கைகூடும்.

ஆக மேலே சொல்லியுள்ள எந்தக் கருத்துக்களுடன் நாம் உடன்படுவது? ஒன்றுடன் கூட உடன்பாடு இல்லை. இருக்க முடியாது. உண்மையில்லாதவைகளுடன் உடன்பட்டு புரட்சி வேண்டாம். தேவையில்லை'' என்ற முடிவை ஏற்றுக்கொண்டு இவர்களுடன் ஒன்றுபட வேண்டும்! புரட்சியைக் காட்டிக்கொடுக்க ஒற்றுமை...பூர்ஷ்வா நிலப்பிரபுத்துவ தலைமையில் உள்ள காங்கிரசின் தேசத்துரோகத்தை மூடி மறைக்க ஒற்றுமை. காங்கிரஸ் தலைமையின் ஏகாதிபத்திய எதிர்ப்பை மிகைப்படுத்தி அத்துடன் ஏகாதிபத்திய ஆபத்தை குறைத்துக் காட்ட ஒற்றுமை...இவ்வாறு அடுக்கிக்கொண்டே போகலாம்...தேவையில்லை.

**காங்கிரஸ் எதிர்ப்பு!**

அவர்களது அத்தனை கருத்துக்களும் பொய்யாயின. கடந்த இரண்டு ஆண்டுகளுக்குள் காங்கிரஸ் தலைமை எந்த அளவு ஏகாதிபத்தியத்துக்கு சரணடைத்து வந்துள்ளது என்பதை நாம் விவரிக்கத் தேவையில்லை. வலதுசாரிகளே ''காட்டிக்கொடுக்கிறார்கள்''என்றும் ''ஏகாதிபத்தியத்திடம் சரணடைகிறார்கள் என்றும்.'' சமீபகாலத்தில் கதறுகிறார்கள் அவர்களை அறியாமலே இந்த சர்க்காரை ''ஏகபோக முதலாளிகளின் சர்க்கார் என்றும் ''பெரு முதலாளித்துவ நிலப்பிரபுத்துவ சர்க்கார்''என்றும் வர்ணிக்கின்றனர். தேர்தல் காலத்தில்—தமிழகம் நீங்கலாக—மற்ற மாநிலங்களில் கடுமையான காங்கிரஸ்எதிர்ப்பைக்கக்கினர் அதற்கு, நம்மைத்தவிர எவருடனும் சேர்த்து எந்தவித ஒப்பந்தங்களையும் செய்து கொண்டனர் ...இப்பொழுதோ இன்னும் வெகுதூரம் முன்னேறி விட்டனர்! சுதந்திராவும் ஜனசங்கமும், அகாலியர்களும் அதிகமாக பங்கு வகிக்கும் மாநில ஆட்சிகளில் பதவி பிடித்து காங்கிரஸ்—எதிர்ப்பு ஐக்கிய முன்னணி வீரர்களாக காட்சியளிக்கின்றனர்!

நாம்ஏதோ சுதந்திராவுடன் ரகசிய உறவு கொண்டுள்ளதாகக்கூப்பாடு போட்டனர்—அன்று ராஜாஜியுடன் ராமமூர்த்திக்கு ஏதோ ஏற்பாடு என்று புழுதியைவாரி இறைத்தனர் அன்று!...அவதூறுகளை அள்ளி வீசுவதில் அவர்களுக்கு அவர்களே ஈடு.

**சிரிப்பதா அழுவதா!**

இன்று ஓட்டமாய் ஓடி சுதந்திராவுடனும் ஜனசங்கத்துடனும், கைகோர்த்து மந்திரி சபை அமைத்து பதவிபிடிக்கின்றனர்—நாம் இப்படிப்பட்ட மந்திரிசபைகளில் பங்கு பெற மாட்டோம் என்ற கோட்பாடு ரீதியான முடிவில் இருக்கிறோம். ''வறட்டுத்தனமான குருட்டுத்தனமான காங்கிரஸ் எதிர்ப்பாளர்கள்'' என்று நம்மைப்பற்றி எழுதியவர்கள், பேசியவர்கள் காங்கிரசில் உள்ள தேசீய ஜனநாயக சக்திகளைப் பார்க்கத்தெரியாதவர்கள் என்றுஎழுதியவர்கள் பேசியவர்கள்—இன்று எங்கே நிற்கின்றனர்......அந்தோ, பரிதாபம்! பல்டி அடித்தாலும் இந்தபல்டி யாராலும் அடிக்க முடியாது.!...இவ்வளவும் செய்துவிட்டு, 'எங்கள் வழியேசரியானவழி' 'என்றும் கட்சியின் திட்டமே சரியான திட்டம்.' எங்களுடன் வந்து சேருங்கள்''—என்று இவர்கள் பேசுகின்றனர். சிரிப்பதா அழுவதா?

தங்களது அடிப்படை நிர்ணயிப்புகள் அனைத்தும் தவிடு பொடியாகிவிட்டன என்பதை ஒப்புக்கொள்ள நேர்மை வேண்டும், துணிவும் வேண்டும். வாழ்வும், நடைமுறை அனுபவமும் அக்கருத்துக்களை நொறுக்கி யெறிந்துவிட்டன. ஆயினும் நேர்மையும் உணர்வும் இல்லாததால் இதனை ஒப்புக்கொள்ள மறுக்கின்றனர்.

**ஒன்றுபடமுடியாது!**

யாருடன் ஒற்றுமை? மார்க்சியவாதிகள் மார்க்சீயவாதிகளுடன்தான் ஒரே கட்சியில் ஒன்று படமுடியும். மார்க்சீயவாதிகள் மார்க்சீயத்தை எதிர்ப்பவர்களுடன் ஒன்றுபடமுடியாது. மார்க்சீயவாதிகள் திருத்தல்வாதிகளுடன்—அதாவது தத்துவார்த்த நிலையில்பூர்ஷ்வாக்களின்ஏஜெண்டுகளுடன்--ஒன்றுபடமுடியாது; ஒரே கட்சியாக முடியாது. ஜனநாயக புரட்சி வேண்டாம் தேவையில்லை என்ற நிலையில் உள்ள திருத்தல்வாதிகளுடன் மக்கள்—ஜனநாயகப் புரட்சிக்கு நிற்பவர்கள் ஒன்றுபட முடியாது ஆளும்வர்க்கங்களாகிய பூர்ஷ்வா நிலப்பிரபுத்துவ வர்க்கங்களில் (ஆளும் காங்கிரஸ் கட்சியில் உள்ள பகுதியோ அல்லது காங்கிரசுக்கு எதிரானகட்சிகள் எனப்படுபவைகளுக்குள் உள்ள பகுதியோ) ஏதாவது ஒருபகுதியுடன் சேர்ந்து வால்பிடித்து, மற்ற பகுதியை எதிர்ப்பதாக சொல்பவர்களுடன், ஆளும் வர்க்கங்களை பூண்டோடு களைந்தெறியவேண்டும் என்று இருப்பவர்கள் இணைய முடியாது, ஒன்றுபட முடியாது.

இந்தியாவில் நிலவும் பிரத்தியட்ச நிலைமைகளுக்குப் பொருத்தமான வகையில் மார்க்சீய—லெனினிசக் கண்ணோட்டத்தைப் பிரயோகித்து மக்கள் ஜனநாயகப் புரட்சிக்கான நாம் தயாரித்துள்ள திட்டத்தின் அடிப்படையில் தான் ஒன்றுபடமுடியும்—(கல்கத்தாவில் நடந்த 7வது மாநாட்டில் நிறைவேறிய திட்டம்) இல்லையென்றால் இல்லை.

---

(5ம் பக்கத் தொடர்ச்சி)

ரால் அதிகாரிகள் சூறையிட முடியாதபடியும் கண்காணிக்க கம்யூனிஸ்ட் கட்சி அறைகூவல் விடுத்துள்ளது. ஏனென்றால் கடந்த மூன்றாண்டுகளில் லட்சக்கணக்கான ரூபாய்கள் திட்டமென்ற பெயரால் வீணாக்கப்பட்டன.

தன்னுடைய இரண்டாவது மாநாட்டை 1967 ஜூலை மாதத்தில் வைத்துக்கொள்வதெனவும், இம் மாநாட்டை துவக்க இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளர் தோழர் பி. சுந்தரையாவை அழைப்பதெனவும், பீப்பிள்ஸ் டெமாகிரசியின் ஆசிரியரும் பொலிட்பீரோவின் உறுப்பினரும் ஆன தோழர் பி.டி. ரணதிவேயை கௌரவ மிக்க விருந்தாளராக மாநாட்டிற்கு அழைப்பதெனவும் மாநாடு முடிவெடுத்தது.

மக்கள் சபை கம்யூனிஸ்ட் கட்சித் தலைவரான தோழர் ஏ.கே. கோபாலனை கோவாவெங்கும் சுற்றுப்பிரயாணம் செய்து இரண்டாவது மாநாட்டிற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்யவும் சிசான் மாநாட்டை துவக்கவும் அழைப்பதென மாநாடு தீர்மானித்தது.

கோவாக் கிளையின் முன்னாள் செயலாளர் திவாகர் ககோட்காரை கட்சியிலிருந்து விலக்கியதை மாநாடு அங்கீகரித்ததோடு கட்சியின் சார்பில் அறிக்கை விடுவதற்கோ பேசுவதற்கோ அவருக்குள்ள உரிமையையும் மாநாடு தடை செய்தது. ஒரு ஸ்தாபன அறிக்கையும் ஒரு அரசியல் அறிக்கையும் மாநாட்டில் நிறைவேற்றப்பட்டது. வாஸ்கோடகாமாவைத் தலைமை அலுவலகமாகக் கொண்டு ஐந்து உறுப்பினரைக் கொண்ட செயற்குழுவுடன் மாநிலக் குழு செயல்படும்.

பத்தொன்பது உறுப்பினர்களைக் கொண்ட கோவா மாநிலக் கமிட்டி மே மாதம் இரண்டாவது வாரம் கூடி குறைந்த பட்சத் திட்டத்தை நடைமுறைக்கு கொண்டு வர மக்களை நடவடிக்கையில் ஈடுபடுத்த ஒரு திட்டவட்டமான திட்டத்தை தீட்டும்.

# வெகுஜன ஸ்தாபனங்களில் ஒற்றுமையை சீர்குலைப்பது திருத்தல்வாதிகளே !

(1—பக்கத் தொடர்ச்சி)

காக இவர்கள் ஜனதிபதியிடம் காவடி தூக்கினர். ஆனால் ராஜஸ்தான் பிரச்சினை மீது எதிர்க் கட்சிகள் பாராளுமன்றத்தில் வெளிநடப்புச் செய்தபோது ராஜஸ்தானத்தில் ஜனதிபதி ஆட்சியால் பாதிக்கப்பட்ட பிரதான கட்சியான சுதந்திராக் கட்சி வெளிநடப்பில் கலந்து கொள்ளவில்லை என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும்.

இந்தப் பின்னணியில் வலதுசாரிகள் தீண்டாமை நிலையை அனுஷ்டிப்பதில்லை என்று சொல்வது தீவிரமான சந்தேகங்களை கிளப்புவது நியாயம் தானே! இந்தக் கட்சிகளைப் பொறுத்த மட்டில் திருத்தல்வாதிகள் வர்க்கப் பாதையைக் கைகழுவி விட்டனர். காங்கிரசை எதிர்ப்பதென்ற பெயரால் பிரமைகளை ஊட்டும் கருவியாகச் செயல்படுகின்றனர்.

### ஜனநாய சக்திகளின் ஐக்கியம் பற்றிப் பசப்பல் !

தங்களின் அறிக்கையில் திருத்தல் வாதிகள் சொல்லளவில் மக்கள் இயக்கம் பற்றியும், ஒன்றுபட வேண்டியதன் அவசியத்தையும் குறிப்பிட்டுள்ளனர். அதாவது இடதுசாரி ஜனநாயக சக்திகளின் ஐக்கியம் பற்றி குறிப்பிட்டுள்ளனர். ஒன்றுபட்ட நடவடிக்கைக்காகவோ, அல்லது மக்களுக்குச் சாதகமாக வர்க்க சக்திகளின் சம நிலையை தீர்மானமாக மாற்றுகின்ற மக்களின் போராட்டங்களை முன்னெடுத்துச் செல்ல இடதுசாரி ஜனநாயக சக்திகளின் ஐக்கிய முன்னணியை அமைக்கவேண்டுமென்பதிலோ இரண்டு கருத்துக்கள் இருக்க முடியாது.

### அவர்களின் சுய விமர்சனம்

மேலும் நமது கட்சியும் திருத்தல்வாதக் கட்சியும் ஒன்றுபட்ட நடவடிக்கையெடுக்க வேண்டியது மிக முக்கியமானதென திருத்தல் வாதிகள் பகர்கின்றனர். நம்மைப் பிளவுவாதிகள் என்று அழைத்த பின்னர் இவ்வாறு சொல்கின்றனர். ஒருவேளை இது அவர்களின் சுய விமர்சனம் தானே! வெட்கமின்றி நம்மை பிளவுவாதிகள் என்று அழைத்துக்கொண்டே மாஜி உள்துறை அமைச்சர் நந்தாவுடன் கூட்டுசேர்ந்துகொண்டு கட்சியைப் பிளக்கக் காரணமாயிருந்தது, திருத்தல்வாதக் கட்சிதான் என்பது உலகறிந்த உண்மையாயிற்றே, அப்படியானல் ஒன்றுபட்ட நடவடிக்கை என்று இவர்கள்சொல்வதன் மர்மம் என்ன? உண்மையாகத்தான் சொல்கிறார்களா? அல்லது இதுவும் ஒரு ''ஸ்டண்டா''. நமது கட்சிதான் எப்போதுமே கூட்டு நடவடிக்கைக்காக நின்றுள்ளதே. ஏன்? இரண்டு அமைச்சரவையில் நாம் ஏற்கனவே கூட்டாக செயல்பட்டு வருகிறோம்.

### ஒற்றுமைக்கு நின்றது நாங்களே !

அகில இந்திய தொழிற் சங்க காங்கிரசின் மேடையில் நின்று திருத்தல் வாதிகள் பெரும்பான்மையைப் பிடிக்க கேவலமான வழிமுறைகளை கையாண்ட பின்னரும் கூட ஒற்றுமைக்கு முழங்கியதுஎமது கட்சி. சிறுபாண்மையாக இருந்தாலும் தொடர்ந்து பணியாற்ற உறுதி கொண்டோம்.

### சீர்குலைத்தது அவர்களே !

ஆனல் இவர்கள் செய்தது என்ன? அகில இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரசை டாங்கேயும் திருத்தல்வாதிகளும் தங்கள்பாக்கெட் ஸ்தாபனமாக நடத்திவருகின்றனர். அது டாங்கேயின் இஷ்டப்படி நடத்தப்படுகிறது. தொழிலாளர்களை ஒருநெருக்கடி வாட்டிவதைத்து வருகிறது. ஆனல் டாங்கே ஏ.ஐ.டி.யு.சி. கூட்டத்தைக் கூட்டவில்லை. சர்வதேச மாநாடுகளுக்கு அனுப்பப்படும் பிரதிநிதிகள் அனைவரும் டாங்கேத் திருத்தல் வாதிகளே. நம்முடைய பிரதிநிதிகள் அனுப்பப்படுவதில்லை. நாம் பெரும்பாண்மையுள்ள இடங்களில் தொழிற்சங்கத்தை இரண்டாகப் பிளந்து தங்களது தொழிற்சங்கத்தை அங்கீகரித்துக் கொள்கின்றனர் திருத்தல் வாதிகள்.

மேற்கு வங்கத்தில் தொழிற்சங்க காங்கிரசை கூட்ட மறுக்கின்றனர்.

பம்பாய் ஏ.ஐ.டி யு.சி மாநாட்டில் நாம் முன் வைத்த ஒற்றுமைக்கான திட்டம் ஏகமனதாக ஏற்கப்பட்டது. அதை இவர்கள் எவ்வாறு நடைமுறைப் படுத்துகின்றனர்.

### விவசாய சங்கத்தில் சீர்குலைவு வேலை !

விவசாயிகள் சங்கத்தில் நம்முடன் ஒத்துழைக்க மறுக்கின்றனர். ஜனநாயக வழிமுறைகளை பின்பற்ற அவர்கள் தயாராக இல்லை. நந்தா விவசாயிகள் சங்கத் தலைவர்களை சிறையில் பூட்டிய சந்தர்ப்பத்தை பயன்படுத்தி அவசர அவசரமாக மாநாட்டைக் கூட்டி நம்முடைய தோழர்களை கமிட்டியிலிருந்து விலக்கினர். இதை அகில இந்திய விவசாயிகள் சங்கம் தவறு என்று சுட்டிக் காட்டியபோது கேட்கவோ, பெரும்பான்மை தீர்மானத்தை ஏற்கவோ மறுத்தனர். கல்கத்தாவில் கடந்த ஏப்ரலில் நடந்த விவசாயிகள் சங்கக் கூட்டத்தில் கலந்துக் கொள்ளவே இல்லை.

### உண்மை ஆர்வமா ? வெறும் ஸ்டண்டா ?

எனவே நாங்கள் பின்வரும் வினவை எழுப்ப கடமைப்பட்டுள்ளோம். நீங்கள் ஒன்றுபட்ட நடவடிக்கை பற்றி பேசுவது உண்மைதானா ? அல்லது இதுவும் ஒரு ''ஸ்டண்டா''! நீங்கள் வானளாவப் பேசுவதைவிட ஒரு குந்துமணி அளவுக்கேனும் உங்கள் நடைமுறை உண்மையானதாயிருந்தால் நாங்கள் அதை நம்ப முடியும். நாங்கள் ஒற்றுமைக்காகத்தான் நிற்கிறோம். அகில இந்திய தொழிற் சங்க காங்கிரசின் கீழ் ஒன்றுபட்டிருப்பதன் மூலம் தான் தொழிலாளிவர்க்கம் தனது சக்தியாற்றல்முழுவதையும்பயன்படுத்தி தனது நலனைப் பாதுகாத்துக்கொள்வதற்கும், தன்னுடைய அரசியல் பாத்திரத்தை சிறப்பாக வகிப்பதற்கும் ஆன ஒரேவழி. நாங்கள் இதே கொள்கைகளைத் தான் அகில இந்திய விவசாயிகள் சங்கத்திலும் பிற வெகுஜன ஸ்தாபனங்களிலும் பின்பற்றி வருகிறோம்.

[தலையங்கம் பீப்பிள்ஸ் டெமாக்கிரசி)

## பட்டாபிராம் சதர்ன் ஸ்ட்ரக்சுரல்ஸ் நிர்வாகத்தின் சட்டவிரோதக் கதவடைப்பு! அக்கிரமப் பழிவாங்குதல்! தொழிலாளரின் அறப்போர் !

பட்டாபிராம் சதர்ன் ஸ்ட்ரக் சுரல்ஸ் தொழிலாளர்கள் எஞ்சனியரிங் சம்பள போர்டின் சிபாரிசுகளை அமுல்நடத்த வற்புறுத்தி ஜனவரிமாதத்தில் வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுத்தனர்.

நிர்வாகம் பண்டிகை அட்வான்சாகக் கொடுத்தரூ100ல் ஜனவரி மாதம்வரை பிடித்த ரூ 20 நீங்கலாக மீதியுள்ள ரூ 80 ஏப்ரல் வரை பிடிப்பதில்லை என்றும் ஏப்ரல் மாதத்திற்குள் எஞ்சினியரிங்போர்டு சிபாரிசை அமுல் நடத்துவது குறித்து பேசித்தீர்த்துக்கொள்ளலாம் எனவும் தொழிற்சங்கத்துடன் உடன்பாடு செய்து கொண்டது. ஆனல் ஏப்ரல் முடிந்தபின்னரும் கூடஇதுபற்றி பேசவில்லை இதற்கிடையில் வேறு வழியின்றி போராட்டத்திற்குத்தயாராகும்படி தொழிலாளருக்கு அறைகூவல் விடுத்தது செங்கொடிச் சங்கம்.

இதற்கிடையில் தொழிலாளரின் போராட்டத்தை திசைதிருப்பவும், தொழிலாளருக்கு சம்பள போர்டின் சிபாரிசை தராமல் வஞ்சிக்கவும் சங்கத்தின் முக்கியமான 7 தோழர்களை அக்கிமரமாக பழிவாங்கியது நிர்வாகம். இதை எதிர்த்து தொழிலாளர் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் நடத்தினர். நிர்வாகமோ சட்டவிரோதக் கதவடைப்புச் செய்துள்ளது.

தொழிலாளரின் போராட்டத்தை நசுக்க நிர்வாகம் போலீசின் துணையுடன் செயல்படுகிறது. 24க்கு மேற்பட்ட தொழிலாளரை போலீஸ் அநியாயமாகக் கைது செய்து நிர்வாகத்தின் துண்டுதலுடன் பொய் வழக்குகளை ஜோடித்துப் போட்டுள்ளது.

தொழிலாளர்கள் நிர்வாகத்தின் சட்டவிரோத கதவடைப்பை எதிர்த்தும், பழிவாங்குதலை கைவிடக்கோரியும். சம்பள போர்டு சிபாரிசுகளை அமுல் நடத்தக் கோரியும், போலீஸ்அடக்குமுறையையும். நிர்வாகத்தின் ரவுடித்தனத்தையும், எதிர்த்துஉறுதியுடன் போராடி வருகின்றனர்.

ஆண்டுக்குஆண்டுகதவடைப்புச்செய்து தொழிலாளரை பட்டினிபோடும்நிர்வாகத்தின் அராஜகத்தை ஒடுக்க மத்திய மாநில அரசுகளே கம்பெனி நிர்வாகத்தை ஏற்று நடத்த வேண்டுமென தொழிலாளர் கோரிவருகின்றனர்,

தமிழக அரசு இவ்விஷயந் தலையிட்டு ஆவன செய்யுமென எதிர்பார்க்கிறோம்.

வெல்க பட்டபிராம் தொழிலாளரின் அறப் போர்!

## விலாசம் மாற்றம்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)
மாவட்டக் கமிட்டி
98, ஜலால் புரு தெரு
சேலம்-1

★

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)
மாவட்டக் கமிட்டி
15, சிங்காரத் தோப்பு
திருச்சி-8

## சேலம் மில் தொழிலாளரின் மகஜர்

4-5-67மேட்டூருக்கு தமிழக முதலமைச்சர் திரு. சி. என் அண்ணதுரை வருகை தந்தபோது சேலம் ஜில்லா மில் தொழிலாளர் சங்கத்தின் மேட்டூர் கிளையின் சார்பில் போனஸ் பிரச்சினைக்கு தீர்வு கானஆவனசெய்யக்கோரியும் உடலுழைப்புத் தொழிலாளருக்கு அரிசி ரேஷன் அளவை உயர்த்தக்கோரியும். பஞ்சப்படியை உயர்த்தக் கோரியும். குறைந்தகூலியில்அதிகஉழைப்பைச் சுரண்டும் வெள்ளை நிர்வாகத்தின்கொடுமையை தடுக்ககோரியும், நைட் அலவன்ஸ் உட்பட தொழிலாளர்களின் பல உரிமைகளை கோரியும் மகஜர் சமர்ப்பிக்கப்பட்டது.

## எம் பி, எம்.எல்.ஏக்கள் படங்கள் 100 ரூ. 20

கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) எம்.எல்.ஏக்கள், எம். பிக்கள் படங்கள்பற்றிசென்ற வாரம் வெளியான விளம்பரத்தில் 100 படங்கள் விலை ரூ. 2 என்று வெளியாகியிருப்பது தவறு. 100 படங்கள் விலை ரூ 20 என்று திருத்திவாசிக்கவும்.

படங்கள் கிடைக்குமிடம்:—

பி. பால்ராஜன்
புரட்சி பேப்பர் மார்ட்
2.6.2.c. பெரிய பிள்ளை மார்ட் தெரு
சிவகாசி

## பாராட்டுக் கூட்டம்

மன்னைத் தாலுகா கமுகத்தூரில் வெற்றிபெற்ற கூட்டணி எம்.எல்.ஏக்களுக்குப் பாராட்டுக் கூட்டம் அண்மையில் நடைபெற்றது. திரு ஆர். சீனிவாசன் (தி.மு.க.) தலைமை வகித்தார். சட்டமன்ற உறுப்பினர்கள் பி. எஸ். தனுஷ்கோடி, என். சோமசுந்தரம், எல். கணேசன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

தோழர்கள் ஏ. நடராஜன், ஏ.கே. கணேசன் மற்றும் பலர் பாராட்டிப் பேசினர்.

டைம்ஸ்பிரஸ் (153, டாக்டர் நடேசன் ரோடு சென்னை--5)ல் அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் : கே. முத்தையா